## சபாபதி முதலியாரும் - பேசும் படமும்

# நான் குற்றவாளி

இவ்விரண்டு விநோத நாடகங்களும் ராவ்பகதூர்
நாடகப் பேராசிரியர்

**ப. சம்பந்த முதலியார்,** பி. ஏ. பி. எல்
*அவர்களால் இயற்றப்பட்டவை*

### இவரது மற்ற நூல்கள்

*லீலாவதி - சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள். நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம் இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம். தாசிப்பெண், மெய்க்காதல், பொன்விலங்கு, சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி. ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி— சுலோசனா, புஷ்பவல்லி, உத்தம பத்தினி, அமலாதித்யன், கள்வர்தலைவன். சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றும் பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்ரார்ஜுனா, கொடையாளி கர்ணன். சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து. மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான் பேட்டை மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், முற்பகல் செய்யின் பிற்பகல், விளையும் நாடகமேடை நினைவுகள் நாடகத்தமிழ், யயாதி, பிராமணனும் சூத்திரனும், வாணீபுர வணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, மூன்று விநோத நாடிகைகள், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக் கலையில் தேர்ச்சிபெறுவதெப்படி? ஹாஸ்ய வியாசங்கள், தமிழ் பேசும் படக் காக்ஷி, விடுதிப் புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், வள்ளிமணம், கதம்பம், மாண்டவர் மீண்டது, ஆஸ்தானபுர நாடக சபை சங்கீதப் பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள், சபாபாதி ஜமீந்தார் சிவாலயங்கள் இந்தியாவிலும் அப்பாலும்— சிவாலய சிற்பங்கள், சதி சக்தி, பனை ஆட்சி, இந்தியனும் ஹிட்லரும், தீபாவளி வரிசை, காலக் குறிப்புகள், சுப்ரமண்ய ஆலயங்கள். தீயின் சிறு திவலை, கலையோ காதலோ, உணவுப் பொருள்கள் சபாபதி துவிபாஷி, சபாபதி துணுக்குகள், இல்லறமும் துறவறமும்.*

2.50

 1956 [விலை ரூபா [redacted]

என் தந்தை—தாயார்

## ப. விஜயரங்க முதலியார்
## ப. மாணிக்கவேலு அம்மாள்

ஞாபகார்த்தமாக இந்நூல் சமர்ப்பிக்கப்பட்டது

---

## முகவுரை

இவைகளையாவது, நான் எழுதியுள்ள மற்ற நாடகங்களையாவது நடிக்க விரும்புவோர் எனது அனுமதியை முன்பு பெற்றே நடிக்க வேண்டுமென்பதைக் கவனிப்பார்களாக. இந்த நாடகங்களிலும் எனது மற்ற நாடகங்களிலும் வரும் பெயரெல்லாம் புனைப்பெயர்களே யொழிய யாரையும் குறிப்பனவல்ல.

எனது நாடகங்களில் எனக்குள்ள காபிரைட் சட்டப்பிரகாரம் எனக்கு பிற்காலம் 50 வருடங்களுக்கு எனது வாரிசுகளுக்கு உரித்தாகும்.

*70 ஆச்சாரப்பன் தெரு,*
*சென்னை,*
*5—12—40*

இப்படிக்கு
**ப. சம்பந்தம்.**

# "சபாபதி முதலியாரும்—
# பேசும் படமும்"



## (ஓர் நகைச்சுவை நாடகம்)

சபாபதி 9-ம் பாகம்

### நாடக பாத்திரங்கள்



| | | |
|---|---|---|
| சபாபதி முதலியார் | ... | ஓர் செல்வந்தன் |
| வேலையாள் சபாபதி | ... | சபாபதி முதலியாரின் வேலையாள |
| ஜெகந்நாத முதலியார் | ... | பேசும்பட அனுபவசாலி |
| நாராயணசாமி பிள்ளை | ... | ஓர் நாடகசபை முதலாளி |
| சுந்தர முதலியார் | ... | ஓர் வயோதிக நடிகன் |
| பாலாமணி | ... | ஓர் நடிகை |
| பால கோபாலன் | ... | எஸ். எஸ். எல். ஸி. பரிட்சையில் தவறிப்போன சிறுவன் |
| கோகில கோமளம் | ... | ஓர் நடிகை |
| கிருஷ்ணசாமி முதலி [யார் | ... | சபாபதி முதலியாரின் மைத்துனன் |
| கதை நிகழுமிடம் | .... | சென்னை |
| கதை நிகழ்காலம் | ... | தற்காலம் |

# சபாபதி முதலியாரும் பேசும் படமும்



## முதல் காட்சி

*சபாபதி முதலியார் வீடு: சபாபதி முதலியார் சாய்வு நாற்காலியில் முகவாட்டத்துடன் உட்கார்ந்திருக்கிருர். வேலையாள் சபாபதி ஒரு தட்டில் பலகாரத்தையும் காபியும் எடுத்துக்கொண்டு வருகிருன்.*

**வே. ச.** ஏம்பா கடியாரம் மூணு அடிச்சு ரொம்ப நாழியாச்சே காப்பி கொண்டார என்னை ஏன் கூப்பிடலே!

**ச. மு.** தட்டை அந்த டீப்பாய் மெலே வை.

**வே. ச,** ஏம்பா ஒருமாதிரி உக்காந்திருக்கிறே!

**ச. மு.** ஒண்ணுமில்லேடா,

**வே. ச.** ஏம்பா, ஒண்ணுமில்லேடாண்ணு சொல்ரதையே ஒரு மாதிரியா சொல்ரையே அதிலேயே தெரியலையா—அண்ணைக்கி அரை மணி நேரம் காந்திதாத்தா யாரும் பொய் பேசக்கூடாதுண்ணு சொன்ருருண்ணு சும்மா திருப்பி திருப்பி சொன்னையே நீ மாத்திரம் பொய் பேசலாமா !

**ச. மு** நான் எங்கேடா பொய் பேசனே.

**வே. ச,** இதோ பாரப்பா உம்மனசிலே இருக்கிறதை நான் சொல்றேன் அது நெசமா இல்லையாண்ணு சொல்லணும்.

**ச, மு.** சொல் பார்க்கலாம்!

**வே. ச.** நேத்து அண்ணி அவங்க அம்மா வூட்டுக்கு போயிருக்காங்களே.—அவர்களை பத்தியே நெனைச்சிகினு இந்த மாதிரி மூஞ்செ வெச்சிகினுருக்கே!

**ச. மு.** டேய்—நான் பொய் பேசக்கூடாது. நீ சொன்னது நெஜந்தான்—இது எப்படா உனக்கு தெரிஞ்சுது.

**வே. ச.** ரொம்ப சுலபம்பா நேத்து அண்ணி அவுங்க அம்மா வூட்டுக்கு போனபோது எம் பொஞ்சாதியையும் துணையா இட்டும்பூட்டாங்களே உனக்கு தெரியுமே அதுமுதலு எனக்கு மனசிலேயோ மார்லேயோ வவுத்துலேயோ ஒருமாதிரி இருக்குது—இருந்துதா? உனக்கு பலகாரம் காபியையும் மெத்திக்கி எடுத்துக்கினு வரும்போது கூடத்திலிருந்த பெரிய கண்ணுடியிலே எம் மூஞ்சை பாத்தென். எம்மூஞ்சி இன்னமோ மாதிரி அசிங்கமா யிருந்தது—உடனே இங்கே வந்தேனு உன் மூஞ்சை பாத்தேன்—உம்முஞ்சியும் அதேமாதிரி இருந்தது. அதிலேயிருந்து அண்ணி வுட்டூட்டு போயிட்டாங்களே உன்னெ அதுக்காக வருத்தப்படறேண்ணு எனக்கு தெரிஞ்சுது—நான் சொன்னது சரிதானே!

**ச. மு.** சரிதாண்டா நேத்தும்புடிச்சு ஒருமாதிரியா இருக்குது. பொழுதே போகல்லே அதுக்கு என்ன செய்யுறது ஒரு யுக்திசொல் பார்க்கலாம்.

**வே. ச.** அப்பா ரேசுக்கு போலாமா?

**ச. மு.** டேய் இன்னொருதரம் ரேசைப்பத்தி பேசனையா எனக்கு கோவம் வரும்—அதான் ரேசுக்கு போயி போன ஞாயிற்றுக்கிழமை கையிலிருந்ததெல்லாம் தோத்துட்டு வந்தமே இன்னும் என்னடா ரேசு.

**வே. ச.** ஆமாம்பா நீ சொல்ரது சரிதான், நான்கூட அண்ணெக்கி நாலு ரூபா தோத்துட்டு வந்தேம்பா. அத்தெ சொன்னு எம்பொஞ்சாதி கோவிச்சிக்கிவாண்ணு அவளுக்குக்கூட சொல்லலேப்பா. இனிமேலெக்கி அந்த கிண்டி பக்கமே திரும்பிகூட பாக்கமாட்டேம்பா!

**ச. மு.** அந்த முட்டும் உனக்கு புத்தி வந்துதே.

**வே. ச.** எனக்கு மாத்திரம்தானுப்பா?

**ச. மு.** (சிரித்துக்கொண்டே) எனக்குக்கூடத் தான்—இப்ப சந்தோஷந்தானு உனக்கு.

**வே. ச.** சந்தோஷம்பா!

ச. மு. காலமெ எழுந்தா சாயங்காலம் கிளப்புக்கு போற வரைக்கும் பொழுதே போகமாட்டேண்ணுதடா—ஏதா வது பொழுதுபோக்க யுக்தி சொல் பார்க்கலாம்.

வே. ச. ஏம்பா ஏதாவது புஸ்தகங்களைப் படிச்சிகினுரேன் !

ச. மு. புஸ்தகங்களை ரொம்ப படிச்சா மூளை இளகி போகும் மிண்ருங்கடா.

வே. ச. அப்பா, இப்ப தெரியுதப்பா நம்ப தமிழ் வாத்தியார் எம்மூளை கல்லாட்டும் இருக்குதுண்ணு சொன்னதுக்கு காரணம். அப்பா எனக்கு இன்னொரு யுக்தி தோணுது ஒரு நாய்வால் எழுதேம்பா !

ச. மு. அதென்னடாது நாய்வால்.

வே. ச. அதாம்பா சின்னகதையெ வச்சிகினு பெரிசா இழுக் கராங்களே!

ச. மு. ஓ! நாவலா—அது என் மனசுக்கு பிடிக்கலே வேறே என்னமானு சொல்லு.

வே ச. ஆனு ஏதாவது நாடகம் ஆடலாமே. நீ ஏதாவது எழுது. அதிலே ஒன் சிநேகிதருங்க நானு எல்லாம் ஆடரோம்!

ச. மு. அது ஒதவாதுடா மின்னே ஒருதரம் எழுதி அதை ஒத்திகை போட்டபோது நம்ப மச்சான் கிர்சாமி பாக்க வந்திருந்தவங்க—எல்லாம் சிரிச்ரார்களேடா அது என் ராசிக்கு ஒத்துவல்லே அதுவுமில்லாத இப்போ நாடக சபைகளெல்லாம் படுத்துகினு தூங்குதுங்களே இந்த சினிமா வந்த பின்பாக எல்லாம் சினிமா மயமா யிருக் கிறது,

வே. ச. அப்பப்பா, அப்போ நீ ஒரு சினிமா தயார் பண்ணுப்பா ?

ஜெகந்நாத முதலியார் வருகிருர்

ச. மு. வாங்க ஜெகந்நாத முதலியார் சரியான வேளைக்கித் தான்வந்தீங்க. பொழுது போக்கரதுக்கு நம்ப சபாபதி நான் ஒரு சினிமா ஆரம்பிக்கணும்ணு சொன்னுன். எனக்

கும் அது நல்ல யுக்திதாண்ணு தோணுது—உங்க அபிப் பிராயம் என்ன ?

**ஜெ.** முதலியாரவாள் நீங்க வேறே என்னமாஹ செய்யுங்க இந்த சினிமா கிட்ட மாத்ரம் போகாதீங்க!

**ச. மு.** அது ஏன் அப்படி சொல்ரைங்க, நீங்க அந்த சினிமா விலெல்லாம் நன்றா பழக்கப்பட்டிருக்கீங்களே.

**ஜெ.** நண்ணு பழக்கப்பட்டேன் போங்க! எல்லாரும் ஆரம் பிக்கிராங்களேண்ணு நானும் ஆரம்பிச்சேங்க கையி லிருந்த பணமெல்லாம் சுன்னுவாயிபோயிடுச்சு.

**ச. மு.** அது ஏன் அப்படி.

**ஜெ.** காலம் மின்னேபோல இல்லீங்க இந்த தொழிலிலேயே கதை யெழுதரவங்க, பாட்டு கட்டரவங்க, ஆண் பெண் நடிகருங்க எல்லாரும்—முன்பணம், முன்பணம்ண்ணு வாங்கிப்பூடராங்க அப்புறம் கடைசிலே நாமம் போட ராங்க.

**வே. ச.** அதான் நீங்க நாமம் போட்டுகினு வந்திருக்கீங்களோ இண்ணைக்கி !

**ச. மு.** டேய்! அதனபிரசங்கி வாயை மூடு—இண்ணைக்கி புரட் டாசி சனிக்கிழமை அத்தொட்டு பெரிய நாமமா போட்டு கினு வந்திருக்காரு—அவன் சொல்ரத்தை கவனிக்கா தீங்க நீங்க.

**ஜெ.** இல்லீங்க நம்ப சபாபதி என்ன சொன்னாலும் எனக்கு கோவம் வராது.

**ச. மு.** ஜெகந்நாத முதலியார் உங்க கஷ்டங்களை யெல்லாம் ஒண்ணொண்ணு சொல்லிகினு வாங்க அதை யெல்லாம் தடுக்கரதுக்கு நான் ஏதாவது யோசனை பண்ணிப் பார்க் கிறேன்.

**ஜெ.** முதல் கஷ்டம்—ஜனங்களெல்லாம் பார்த்து சந்தோ ஷிக்கும்படியான நல்ல ஒரு கதையைத் தேடணும்.

**ச. மு.** இது ஒண்ணும் கஷ்டம் இல்லையே அப்படிப் பட்ட கதைகள் எத்தனையோ நான் சொல்லுவனே.

**ஜெ.** கொஞ்சம் பொறுங்க, கதையை தீர்மானித்த பிறகுதான் கஷ்டம் ஆரம்பிக்குது— அந்த கதையை நாடக பாணியா சினிமாவுக்கு ஏற்றபடி வசனங்களை யெல்லாம் அமைத்து எழுதவல்ல ஒரு தமிழ் ஆசிரியனைத் தேட வேண்டும் — இந்த சமாச்சாரம் தெரிந்த உடனே ஊரிலிருக்கிற தமிழ் கதை எழுதத்தெரிந்த எல்லோரும் வந்து நம்மை பிச்சிவிடுவார்கள்—அவர்களில் தக்க ஒருவனை நாம் தேர்ந்தெடுக்க வேண்டும். பிறகு அவனிடம் சொல்லி மேற்சொன்னபடி வசனத்தை எழுதிக் கொடுக்க ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும். ஒப்பந்தம் செய்துகொண்டு அட்வான்ஸ் குடுக்கவேண்டியது தான் தாமதம். இது வரையில் நம்மிடத்தில் தினம் தொங்கிக்கொண்டிருந்த, அவன் பின்னால் நாம் தொங்க வேண்டும். ஒருமாதத்திற்குள்ளாக எழுதித் தருகிறேன் என்று சொன்னவன் ஒரு வருஷத்திற்குள்ளாக எழுதி கொடுத்தால் நம்முடை அதிர்ஷ்டம். இதற்குள்ளாக ஏதாவது போக்கு சொல்லி தனக்கு சேர வேண்டிய பணத்தையும், அதுக்கு மேலாகவும் வாங்கிக் கொள்வான். இதற்குள்ளாக நமக்கு நாலு ஜதை செருப்பு தேய்ந்துபோகும்.

**வே. ச.** ஏம்பா அவ்வளவு அடி தாங்குவாரா கதை எழுதறவரு,

**ச. மு.** அடே முட்டாள் செருப்பு தேய்ந்து போகும்றது ஒரு பழமொழி—தினம் அவர் வீட்டிற்கு போய் கேட்டுவர்ரதுண்ணு அதற்கு அவ்வளவு நடக்கணும்ணு அர்த்தம்—

*நாராயணசாமிப் பிள்ளை வருகிறார்*

**ச. மு.** ஓஹோ நாராயணசாமி பிள்ளை வாங்க வாங்க என் அதிர்ஷ்டமே அதிர்ஷடம் நீங்களும் சரியான வேளைக்கி சொல்லிவச்சாப்போல வந்தீங்க உக்காருங்க—நான் ஒரு பேசும்படம் தயார்பண்ணலாம்ணு யோசிக்கிறேன் அதற்காக இதிலே அதிக அனுபவசாலியான இதோ இருக்கும் ஜெகந்நாத முதலியாரை அதில் உள்ள கஷ்டங்களை யெல்லாம் சொல்லும்படி கேட்டுக்கொண்

டிருக்கிறேன்—நீங்களும் கேளுங்க உங்களுடைய அபிப் பிராயத்தையும் அப்புறம் கேட்கப் போகிறேன்—மேலே சொல்லுங்க ஜெகந்நாத முதலியார்.

ஜெ. சினிமா வசனத்தை கையில் வைத்துக்கொண்டு அதற்கு தகுந்த நடிகர்களையும் நடிகைகளையும் பொறுக்கி எடுக்க வேண்டும்—ஒன்றிருந்தால் ஒன்றிராது. நடிகர்களை முன்பு எடுத்துக் கொள்வோம். ஒரு நடிகன் அழகா யிருக்கிறனே அவன் ராஜ பார்ட்டுக்கு தகுந்தவனாயிருப் பான் என்று சொல்லி அவனை விசாரித்து பார்த்தால் அவன் பாட்டு முழு மோசமாயிருக்கும்—பாட்டு நன்றாக பாடும்படியான நடிகனை தேர்ந்தெடுத்தால் அவன் நடிப்பு பூஜ்யமாயிருக்கும். அந்த கஷ்டங்களையெல்லாம் கடந்து தக்க ஒரு ஆளைக் கண்டுபிடித்து அவனிடம் ஒப்பந்தம் செய்துகொண்டு மற்ற ஆக்டர்களையும் சரிப் படுத்திக் கொண்டு படம் பிடிக்க ஆரம்பித்தோம் என்று வைத்துக் கொள்வோம். பாதி படம் ஆனவுடன் இது வரையில் நாம் சொன்னபடியே கேட்டுக் கொண்டிருந்த அவன் நம்முடைய தலை மீது ஏற ஆரம்பிப்பான்.

வே. ச. அப்பப்பா அந்த ஆக்டர் ஒடம்பு பெருத்தவனா யிருந்தா அவனை தூக்கறது ரொம்ப கஷ்டமாயிருக்கு மல்லா.

ச. மு. டேய் முட்டாள் பேசாதிரு. அவன் நம்மை கஷ்டப் படுத்துவான் என்று அர்த்தம். அதற்கு—அவன் நமக்கு என்ன கஷ்டம் கொடுப்பான் சொல்லுங்கோ.

ஜெ. பாதி படம் பிடித்த பிற்பாடு நம்மை விட்டு மிகுதி பாதியை எப்படி பிடிக்கப்போகிறீர்கள் பார்ப்போம் என்று சொல்லி இது வேணும் அது வேணும் என்றும் தனக்கு பேசின தொகைக்கு மேலாக பணம் வேண்டும் என்றும் தொந்தரவு செய்ய ஆரம்பிப்பான். அதற்கு நாம் இணங்கினல் சரி இணங்காவிட்டால் நொண்டி மாடு படுத்துக்கொள்ளும்.

வே. ச. ஏம்பா அவ்வளவு பெரிய ஆக்டர் ஒத்தை மாட்டு வண்டியிலா வருவான்.

ச. மு. டேய் தடியா எனக்கு சிரிப்பு வருது நீ வாயை மூடிக்கினு இரு—

நா. அவன் கொடுக்கிற கஷ்டத்துக்கு ஒரு உதாரணம் சொல்ரேன் கேளுங்க. இது வாஸ்தவமா என் பேசும் படம் பிடிக்கும்போது நடந்தது. இந்த அயன் ஆக்டர் என்ன செய்தான்—நாளைக்கு ஒரு முக்கியமான காட்சி எடுக்க வேண்டும் என்று சொல்லி எல்லா ஆக்டர்களையும் டெக்னிஷியன்களையும் எச்சரிச்ச பிறகு அன்று சாயங்காலம் தன் தாயார் மரண ஸ்திதியிலிருப்பதாக தனக்கு ஒரு காகிதம் வந்ததாகக் கூறி நாளைய தினம் காலையே தான் புறப்பட்டுப் போகணும் என்று சொல்லி அழுதுக்கொண்டே ஐம்பது ரூபா முன் பணம் கேட்டான்—வாஸ்தவம் என்று நம்பி பரிதாபப்பட்டு என்னிட மிருந்த ஒரு 100 ரூபாய் நோட்டை கொடுத்து பக்கத்திலிருக்கும்படியான பேங்கிற்குப் போய் மாத்திக் கொண்டுவரும்படி அனுப்பினேன். அவன் போன கொஞ்ச நேரத்திற்கெல்லாம் யாரோ ஒரு அம்மாள் வந்தார்கள். யாரைப் பார்க்க வந்தீர்கள் என்ன விசேஷமென்று நான் கேட்க அவர்கள் உங்களிடம் ராஜபார்ட் ஆக்டர் இருக்கிறுனே அவனை அவசரமாய்த் தேடிக் கொண்டு வந்தேன் என்று சொல்லவே நீங்கள் யார் என்று கேட்க அவனுடைய தாயார் நான் என்று சொன்னுர்கள். நான் திடுக்கிட்டவனுய் உண்மையை இன்னும் அறியவேண்டி எதற்காக அவனை அவசரமாய்ப் பார்க்க வேண்டுமென்று கேட்டேன். அதற்கு அந்த அம்மாள் " அவனுக்கு கலியாணம் பண்ண ஒரு பெண் பார்த்திருக்கிறேன். அந்த பெண்ணை நான் நேரில் பார்த்தாலொழிய கல்யாணம் பண்ணிக்கொள்ள மாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறுன்! அந்த பெண்ணை ஒரு சாக்கு சொல்லி எங்கள் பக்கத்து வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்திருக்கிறேன், இப்படி அந்த அம்மாள் சொல்லிக்கொண்டிருக்கும் போதே 50 ரூபாய்க்கு நோட்டையும் மிகுதிக்கு சில்லரையும் மாத்திக்கொண்டு வந்தான். வந்தவன் தன் தயாரைப் பார்த்த

வுடன் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டான்—அப்பொழுது அவன் முகத்தைப் பார்க்க வேண்டுமே!

**வே. ச.** ஏம்பா ஆப்டுகிணுமே இன்னு அழுதழுது மூஞ்சி வீங்கிப்பொச்சா என்ன?

**ச. மு.** இவனொருத்தன்!—சும்மாயிருடா எனக்கு சிரிப்பு வருது இப்படியும் உலகத்திலே ஒரு மனுஷன் பொய் பேசுவானுண்ணு.

**நா.** மொதலியார், மொதலியார் கொஞ்சம் பொறுங்க நான் சொல்ரத்தே கேளுங்க அவனுக்கு அண்ணன் ஒருத்தன் நான் நாடக கம்பெனி ஆரம்பிச்சபோது என்னிடம் ஆக்டராயிருந்தான்; அவன் இவனுக்கு மேலே யுக்தி செய்தான் எனது நல்ல நாடகம் ஒன்று நல்ல வசூலுடன் ஒரு வாரம் ஆடிக்கொண்டு வந்தபோது ஒரு நாள் திடீரென்று ஒரு டெலிகிராம் ஒன்று எடுத்துக் கொண்டு என்னிடம் வந்து "என் தாயார் இறந்து போனார்களாம் தந்தி வந்திருக்குது நான் உடனே இன்னைக்கி மெயிலிலே திருநெல்வேலிக்குப் போகனும் எனக்கு அட்வான்ஸாக பணம் கொடுங்கள், என்று கேட்க—நான் அவனுக்குப் பரிதாபப்பட்டு 100 ரூபாய் கையில் கொடுத்து எல்லா செலவிற்கும் வைத்துக்கொள் என்று சொல்லி தேறுதலும் சொல்லி அனுப்பினேன். அவனில்லாதபடியால் மறு நாள் சாயங்காலம் ஆட்டத்தை நிறுத்திவிட்டேன். எனக்கு வேறொன்றும் வேலையில்லாதபடியால் மறுதினம் கிண்டி ரேசுக்கு போனேன். பந்தய ரவுண்டில் நுழைந்தவுடனே என் கண்களில் முதலில் பட்ட ஆசாமி நம்முடைய ஆக்டர். என்னை பார்த்தவுடன் ஒரே "டும்கியா" வெளியே ஓடிப் போய்விட்டான்! பிறகு நான் விசாரித்ததில் அன்றைய ராத்திரியே புறப்பட்டு திருநெல்வேலிக்கு போய் வேறொரு கம்பெனியில் சேர்ந்து ஆட ஆரம்பித்தான் என்று கேள்விபட்டேன்.

**வே. ச.** ஏம்பா, அந்த ஆக்டருடைய தாயார் செத்துப்பூட்டது வாஸ்தவம்தானு.

நா. அந்த வேடிக்கையும் கேளுங்க அவனை குழந்தையாக பெற்றவுடன் அவனுடைய தாயார் மூன்றும் நாள் இறந்துபோனதாக பிறகு விசாரித்ததில் தெரிய வந்தது. —எப்படி இருக்குது இந்த வேடிக்கை. இந்த கஷ்டங் களை யெல்லாம் படுகிறதைவிட காலை மாடுகளை மேய்க் கலாம்.

வே. ச. ஏம்பா, இந்த கஷ்டங்களெல்லாம் படறதைவிட ஆம் பிளை ஆக்டருங்க இல்லாத ஒரு படம் எடேன். எல்லாம் பொம்மனாட்டிங்களா இருக்கட்டும் கஷ்டம் இருக்காது.

ஜெ. அப்பா சபாபதி நண்ணு சொன்னேபோ. ஆம்பிளைங்க குடுக்கர கஷ்டத்தைவிட இந்த பொம்மனாட்டிங்க கொடுக்கர கஷ்டம் பத்து மடங்கு அதிகம். அயன் ஸ்திரீ பார்ட்டுக்கு ஒரு நல்ல உருவமும் சங்கீதக்யானமும் நடிப்புத் திறமும் பெற்ற ஒரு ஸ்டார் ஆக்ட்ரெஸ் பொருக்கி யெடுத்தோமோ அவளை கட்டிகினு அழறது-

வே.ச. அப்பப்பா இந்த சினிமாவும் வேணும் இந்த பொம்ம னாட்டி என்னமோ சொன்னுரே அவுங்களை கட்டிகவும் வாணும், அழவும் வாணும்! அண்ணி ஊருக்கு போகும் போது "சபாபதி அப்பாவை ஜக்கிரதையா பாத் துக்கோ நான் வர்ரவரைக்கும்"ண்ணு எங்கிட்ட சொல் விட்டு போனுங்க—

ஜெ. இல்லேடாப்பா கட்டிகினு அழறதுண்ணு கலியாணம் பண்ணிகிரதல்லா அவுங்களை மேய்க்கிறது அவ்வளவு கஷ்டமாயிருக்குன்னு சொல்ல வந்தேன்.

ச.மு. அவுங்க என்னமாதிரி கஷ்டம் கொடுக்கராங்க?

ஜெ. முக்கியமான பொம்மனாட்டி ஸ்டார்ங்க எல்லாம் டைரக்டர் சொல்றபடி நடக்காம தாங்கள் இட்டது தான் சட்டமிண்ணு டைரக்டர்களை தாங்கள் சொல்ற படி கேக்கச் சொல்வாங்க. தினம் இது வோணும் அது வோணும், இது வாணும் அது வாணும்ண்ணு ஓரே கூச் சல்தான் அவுங்க இஷ்டப்படி நம்ப ஒப்புக்கா போனு ரிந்தது! மறுநாள் தொண்டை கம்மிபோகும், வயத்து நோவு வரும் ஏதாவது சாக்கு வரும் படம் பிடிக்கிறதை

நிறுத்தி வைக்க வேண்டியதுதான் அவுங்களை திருப்பி கொண்டுவரது பகீரத பிரயத்னம்தான்.

**வே.ச.** ஏங்க? தொண்டை நோவு வயத்து நோவுண்ணு சொன்னு அதுக்கு மருந்து கொடுத்தா போச்சு!

**ஜெ.** நெஜமான நோயிருந்தால் மருந்து குடிக்கலாம் அவுங்களுக்கு வர்ர நோவுங்களுக்கெல்லாம் மருந்து ரொக்கப் பணம்தான். இந்த கஷ்டங்களை யெல்லாம் அனுபவிக்கிறதைவிட ஒருதரம் யமலோகம் போய்விட்டு வரலாம்.

**வே.ச.** அப்பப்பா நீ அங்கெல்லாம் போகாதேப்பா இந்த பொம்மனுட்டி ஆக்டரெஸ்களே இல்லாத ஒரு படம் எடுக்க வழியை பாரப்பா.

**ச.மு.** [சிரித்துக்கொண்டே] ஏன்டா மின்னே என்னுண்ணு ஆம்பிளை ஆக்டெருங்க வாணும்ணே இப்ப என்னுண்ணு பொம்மனுட்டி ஆக்டெரங்க வாணும்மிண்றே அப்றம் யாரை வைச்சிகினு படம் எடுக்கறது.

**வே.ச.** படம் எடுக்காதிருக்கிறது.

**ஜெ.** ஆமாங்க சபாபதி சொல்ரதுதான் சரியான யோசனைங்க இந்தப்படம் எடுக்கறவேலையிலே கையை வெக்காதிங்க நான் சொல்ரேண்ணு கோவம் வாணும் உங்களுக்கு.

**ச.மு.** கோவம் ஓண்ணுமில்லே ஜெகந்நாத முதலியார் நீங்க என் நல்லதுக்குதானே சொல்ரீங்க—இருந்தாலும் நாராயண சாமி பிள்ளை எப்படி சமாளிக்கிறர் அவரை கேட்டு பார்ப்போம். பிள்ளைவாள் ஒங்க நாடக கம்பெனியிலே இந்த மாதிரியான கஷ்டம் வர்ரதில்லையா.

**நா.** நான் ஆரம்பிச்சபோது எவ்வளவோ வந்தது தலை மொட்டையா போச்சு ஒரு யுக்தி பண்ணேன் என் ஆக்டரெஸ்களை யெல்லாம் கூப்டேன். "இந்த மாதிரி கம்பெனி என்னுல் நடத்த முடியாது. உங்களுக்கு சேர வேண்டிய பணம் ஏதாவது பாக்கி யிருந்தால் வாங்கிகினு ஊட்டுக்கு பூடுங்க இல்லே நாடகம் ஆடணும்ண்ணு இஷ்டமிருந்தா நான் சொல்றபடி கேளுங்க ஒரு மாசம் நாடகம் ஆடறது அதுவரைக்கும் உங்களுக்கு

சம்பளமில்லே மாசம் முடிஞ்சவுடனே வரவு கணக்கு பார்க்கிறது நீங்களே பாருங்க நஷ்டம் வந்தா நாம் சும்மா யிருக்கவேண்டியதுதான் லாபம் வந்தாலோ அந்த லாபத்தை உங்கள் நடிப்புத் திரமைக்கு தக்கபடி பகிர்ந்து கொடுக்கிறேன் நானும் ஏதோ ஒரு பங்கை எடுத்துகொள்கிறேன் — என்னசொல்கிறீர்கள், என்று கேட்டேன் இதை சொன்னவுடன் அவர்களெல்லாம் அப்படியே ஆகட்டுமென ஒப்புக்கொண்டு நன்ருக சரியா குறியா நடிக்க ஆரம்பித்தார்கள் நன்ருக நடித்தால்தானே பணம் அதிகமாக வருமென்று ஒவ்வொருவனும் போட்டி போட்டுகொண்டு நடிக்க ஆரம்பித்தனர். சாக்கு போக்கெல்லாம் மறைந்து போய்விட்டது நாடகம் நின்னுபோரு அவுங்களுக்குத்தானே நஷ்டம்.

**ஜெ.** ஆமாங்க உங்க யுக்தி நல்ல யுக்திதான் மாசம் சம்பளம் வாங்கற நாடக ஆக்டரெஸ்களுக்கெல்லாம் இதுசரிதான். ரெண்டு வருஷம் மூணுவருஷம் ஒரு படத்திலே நடிக்கவேண்டிய நடிகர்களும் இந்த ஏற்பாட்டிற்கு ஒப்புக் கொள்ளவே மாட்டார்கள்.

**நா.** அடடா! மணி 4 ஆகிருப்போலே யிருக்குதே நாலு மணிக்கெல்லாம் நான் ஒத்திகைக்கு வர்ரேண்ணு சொல்லிட்டு வந்தேன் பசங்ககிட்ட நான் சீக்கிரம் போகணும் நான் வர்ரேன் முதலியார் — மொதலியார்வாள் சினிமா ஆரம்பிகிகிறதுக்கு மின்னே நண்ணு யோசனை பண்ணி செய்யுங்க நான் வர்ரேன். [போகிருர்.]

**ஜெ.** முதலியார் நீங்க யோசனேயே பண்ணவேண்டாம் நான் சொல்ரத்தே கேளுங்க நீங்க என்ன மாருலும் செய்யுங்க இந்த சினிமா விலே மாத்ரம் வேணு உங்க தகப்பனுர் வைச்சூட்டு போன ஆஸ்தி யெல்லாம் கரைஞ்சி பூடும்.

**ச.மு.** பிரதர் ஜெகநாதன் எனக்கு ஒரு பிர்லியண்ட் (Brillient) யோசனை இப்ப திடீர்னு வந்தது நான் செலவே பண்ணுமல் ஒரு சினிமா தயார் பண்ண யுக்தி தோணியிருக்குது.

ஜெ. அதெப்படி முடியும் பணம் செலவு பண்ணுதே படம் எப்படி தயார் பண்றது ?

ச.மு. அது ஒரு ரகசியம் அப்பறம் சொல்றேன் உங்களுக்கு—ஒருபடம் தயார் பண்ணணும்ணு முதல்லே என்ன செய்யனும் சொல்லுங்க.

ஜெ. முதல்லே நல்ல கதையா ஒணும் நல்ல ஆக்டர்ஸுகளாக ஒணும்ண்ணு ஏதாவது நல்ல பேப்பர்லே அட்வர்டைஸ் பண்ணணும்.

ச.மு. ரைட் யூ ஆர் (Right you are) அதுக்கு சரியான மனுஷர் நீங்கதான் நல்ல ஒரு பத்திரிகையா பாத்து அதிலே இந்த மாதிரி அட்வர்டைஸ் பண்ணுங்க அவசியம் வேண்டியது—ஒரு புது பேசும்படம் தயாரிக்க புதிய கதைகளும் புதிய ஆக்டர்களும் புதிய நடிகைகளும் உடனே வேண்டும். கதை இதுவரையில் யாராலும் எழுதப்படாதபடி புதிதாய் இருக்கவேண்டும் நடிகர்களும் நடிகைகளும் இதுவரையில் சினிமாவில் நடிக்காதவர்களாய் இருக்கவேண்டும் இதில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று விரும்புபவர்கள் உடனே அடியிற்கண்ட விலாசத்திற்கு பதில் ஒரு வாரத்திற்குள் எழுதவேண்டும் கையொப்பம் ச இரண்டு புள்ளி தி, அடே சபாபதி நம்பபுதுசா போனமாசம் வாங்கனமே பங்களா எழும்பூர்லே அது நம்பர் என்னடா.

ச. 4 அப்பா.

ச.மு. அப்போ என்மேல் விலாஸம் 4 கங்காதர கோவில் தெருண்ணு எழுதிடுங்க அதுக்கென்ன சார்ஜாகுங்க.

ஜெ. குறைஞ்ச பட்சம் இருபத்தைஞ்சு ரூபாயாவது ஆகும்.

ச.மு. சந்தோஷம் சரியான தொகை இந்தாங்க இருவத்தஞ்சு ரூபாய்.

ஜெ. வேணுங்க தண்டசெலவு எண்ணுத்துக்குங்க அப்றம் அல்லாத்தையும் இழுத்தும்பூடும்.

ச.மு. ஒண்ணும் இழுத்தும் பூடாது — போறு இந்த இருவத் தஞ்சு ரூபாய் போகட்டுமே அதுக்கு மேலே என்படத் துக்கு தம்பிடிகூட செலவில்லே எனக்கு. இந்த இருவத் தஞ்சு ரூபாயும் தண்டத்துக்கு ஒரு ஒரறு லாட்டரிலே வந்தது தண்டத்துக்கு வந்தது தண்டத்துக்கு போவட்டும்.

ஜெ. முதலியார் நீங்க ஒருபுடி புடிச்சிங்கண்ணு மாத்தமாட் டேங்க அப்படியே செய்யறேன் இப்பவே சொன்னேன் பின்னாலே எம்மேலே கோவிச்சிக்கக் கூடாது.

கடியாரம் 4 மணியடிக்கிறது.

ச.மு. புறப்படுங்க இண்ணைக்கி நல்லநாளு கடியாரம்கூட மணியடிக்குது போய் வாங்க.

[ஜெகநாத முதலியார் போகிருர்.]

வே.ச. அப்பா இந்த பலகாரமெல்லாம் ஆறிப்போயிடுச்சு சீக்கிரம் சாப்டுடலாம்.

**காட்சி முடிகிறது.**

---

## இரண்டாவது காட்சி

*சபாபதி முதலியார் புதிதாய் வாங்கிய வீட்டில் ஓர் அறை சபாபதி முதலியார் ஓர் மேஜையின் பக்கத்தில் உட்கார்ந் திருக்கிருர். மேஜையின் இடது புறத்தில் வேலைக்கார சபாபதி நன்ருய் உடுத்திக்கொண்டு உட்கார்ந்திருக்கிருன். மேஜையின் எதிர் பக்கம் சற்று தூரத்தில் சுந்தரமுதலியார் உட்கார்ந்திருக்கிருர்.*

ச.மு. [எழுதிக் கொண்டே] எல்லாம் சரிதான் இந்த நெலம் வீடெல்லாம் உங்களுக்கு அம்பாசமுத்திரத்திலேயே இருக்கிறதா ?

சு. ஆமாங்க.

ச.மு. [எழுதிய கடிதத்தை பார்த்துக் கொண்டே] உங்க வயசு என்ன சொன்னேங்க!

சு. முப்பத்திரண்டு ஆயி முப்பத்திமூணு நடக்குது.

வே.ச. [திடீர் என்று எழுந்து போய்] ஐஐஐயோ தலே குட்டை யிலே குட்டி தேளு!

[அவர் தலே குட்டையை எடுத்து உதறினன்.]

ச.மு. எங்கேடா தேளு!

ச.வே. எதுவோ தேளுட்டம் இருந்துதுப்பா எங்கேயோ ஓடிப் போச்சோ என்னமோ [வந்து உட்காருகிறன்] அப்பா இவர்வயசை இப்ப கேளப்பா.

ச.மு. என்னஐயா இது! தலேயெல்லாம் நரைச்சு போயிக்குது முப்பத்திரண்டுண்றீங்களே வயசெ!

வே.ச. மீசைக்கி மாத்திரம் கப்பு போட்டுகினு இருக்காரப்பா —ஐயா இனிமேலேக்கு கப்புபோட்டா தலேக்கிகூட போட்டுகுங்க.

சு. வாஸ்தவம் முதலியார், அவசரத்திலே அத்தெ மறந்து பூட்டேன்.

ச.மு. போனு போவுது இப்பவாவது சரியா சொல்லுங்க என்ன வயசு உங்களுக்கு.

சு. அறுவத்திரண்டு ஆவுதுங்க.

ச.மு. மின்னெ பீமசேன வேஷம் போட்டதா சொன்னேங் களே எப்போ அது.

சு. அது ஒரு முப்பது வருஷத்துக்கு மின்னெங்க அப்புறம் வரவர உடம்பு எளேச்சு போச்சு வேலேயில்லாதே சாப் பாட்டுக்கு இல்லாதே—முதலியார் எப்படியாவது தயவு பண்ணி உங்க படத்திலே எனக்கு ஒரு பார்ட் கொடுக் கணும்.

ச.மு. பிரிங்கி மகரிஷி வேஷம்தான் உங்களுக்கு கொடுக் கணும் அந்த ரிஷிவர்ர கதையை நான் எடுத்துக்கொள் ரதா இருந்தா உங்களுக்கு சொல்லி யனுப்பறேன். உங்க மேல் விலாஸம்தான் கொடுத்திருக்கீங்களே— இப்பபோய்வாங்க.

ச. வர்ரேனுங்க. [போகிறார்.]

ச.மு. டேய் நல்ல யுக்தி பண்ணேடா!

வே.ச. பின்னே என்னுப்பா பல்லெல்லாம் உதுந்துபோயிருக்குது மிப்பத்திரண்டு வயசுண்ணுரே தலேகுட்டையிங் கிழே கொஞ்சம் வெள்ளை மயிர் தெரிஞ்சுது அதும்பேரிலேதான் அந்த யுக்தி பண்ணேன்.

ச.மு. சந்தோஷம் [கால்பெல் மணியை தட்டுகிறார்.]

பாலாமணி வருகிறாள்.

பா. நமஸ்காரம்.

ச.மு. வாங்கம்மா உக்காருங்க உங்க பெயர் என்ன?

பா: பாலாமணி—நவீன பாலாமணி.

ச.மு. உங்க வயசென்ன?

பா. முப்பது.

ச.மு. உங்க காகிதத் தொட ஒரு படம்கூட அனுப்பிச்சீங்களா?

பா. ஆமாங்க.

ச.மு. இதுதானே அந்த படம்?

பா. ஆமாங்க.

ச.மு. இது—உங்க படமா?

பா. ஆமாங்க கொஞ்சம் வருஷத்துக்கு மின்னே எடுத்தது.

ச.மு. எத்தனே வருஷத்துக்கு மின்னே எடுத்தது?

பா. மூணு நாலு வருஷத்துக்கு மின்னே இருக்குங்க.

ச.மு. எங்கே எடுத்தது?

பா. மதுரையிலே வரதராஜர் கம்பெனியிலே சித்ராங்கியாக ஆடின போது எடுத்தது.

ச.மு. யார் எடுத்தது இந்த படம்?

பா. மதுரையிலே புகைம்படம் பிடிக்கும் சுலோசன முதலியார்.

ச.மு. அவரா எடுத்தார்?

பா. ஆமாங்க இவர்தான் என்னை சித்ராங்கி வேஷத்தோடே எடுத்தார்.

ச.மு. ஏம்மா—புளுவனுலும் பொருந்த புளுவனும் அந்த சுலோசன முதலியார் எனக்கு மாமாவாகணும்—அவர் இறந்துபோய் 18 வருஷமாகுதே—இந்த படம் மூணு நாலு வருஷத்துக்குமின்னே புடிச்சதுண்ணேங்களே அது பொய்தானே—உங்கவயசு முப்பதுண்ணு சொன்னதும் பெய்தானே இப்பவாவது சொல்லுங்க இப்போ உங்க நிஜமான வயசென்ன?

பா. [அழுதுக்கொண்டே] ஆமாங்க பொய்தான் என் வயசு 51 என் கஷ்டகாலம் வயத்து பொழைப்புக்காக பொய்பேச செய்தது.

ச.மு. அதான் பொய் பேசறுதான் பொழைக்கலாம் இந்த காலம்னு சொல்ராங்களே அதை நம்பி நடக்கருபோலே யிருக்குது—சரிதான் இப்ப உங்களாலே பாடமுடியுமா.

பா. முடியுங்க.

ச.மு. எதோ கொஞ்சம் பாடுங்க கேக்கலாம்.

பா. சாரீரம் இண்ணைக்கி கொஞ்சம் கம்மலாயிருக்குதுங்க.

வே.ச. ஏம்பா இவுங்களுக் கெல்லாம் பாடச்சொன்ன கம்மல் வந்துடுது!

பா. முதலியார்வாள் ரொம்ப கஷ்டதிசையிலிருக்கிறேன் ஒங்க படத்திலே ஏதாவது வயசான ஆக்ட் இருந்தா, ஆக்ட் பண்ணி பொழைச்சிம் போறேன்.

ச.மு. சரிதாம்மா அந்த முட்டும் நெஜம் பேசனேங்களே தாயார் பாத்திரம் ஏதாவது எங்கதையிலே வந்தா உங்களுக்கு சொல்லியனுப்பறேன்—நீங்க உத்திரவு பெத்துகுங்க.

பா. நமஸ்காரம் முதலியார் தயவிருக்கணும் ஏழையின் பேரிலே. [போகிருள்.]

வே.ச. அப்பா நீ பாத்தியா இந்தம்மா தலைக்கி "டோபா", கட்டிருக்காங்கப்பா தலை மயிரெல்லாம் வெளுத்

துப் போச்சோ என்னமோ நீ பேசிகிளுருக்கும்போது நான் சந்தேகப்பட்டு அந்தப்பக்கம் இருக்கிற கடியாரத் துக்கு சாவி கொடுக்கறத்துக்கு போறாப் போலே போன போது பின்பக்கப் டோபா கயிறு கட்டியிருந்தது தெரிஞ்சுதப்பா -- அதிருக்கட்டும்பா இவர்களை யேன் சொத்து விவரம் கேட்கலே.

ச.மு. என்னத்துக்கேக்கறது தண்டத்துக்கு?—

[மணியடிக்கிறார்.]

பாலகோபாலன் வருகிறான்.

ச.மு. யாரப்பாது உட்கார்—உன் பெயரென்ன?

பா. பாலகோபாலன்.

ச.மு. ஓ உன் படம் உன் காகிதத்தோட அனுப்பிக்கலே போலே யிருக்குதே?

பா.கோ. இல்லேங்க.

ச.மு. சரிதான்—நீ ஏதாவது நாடகத்திலே ஆக்ட்பண்ணி யிருக்கயா?

பா.கோ. இல்லே.

ச.மு. உனக்கு பாடத் தெரியுமா?

பா.கோ. தெரியாது.

ச. மு. பின்னே என்னதான் தெரியும.

பா. கோ. நான் புட்பால் ஆடுவேன்.

ச. மு. ஆனு நீ சினிமாவிலே சேர ஏன் ஆசைப்பட்டே?

பா. கோ. நான் எஸ். எஸ். எல். ஸி. யிலே ரெண்டு வருஷம் பெயிலாப் போனே அத்தொட்டு படிப்பை நிறுத்திட்டு சினிமாவிலே ஆக்ட் பண்ணலாமொண்ணு பார்க்கிறேன்.

ச. மு. ஒனக்கு என்ன பார்ட்டப்பா கொடுக்க முடியும்!

பா. கோ. ஏதாவது பால பார்ட்.

ச. மு. பால பார்ட்டா! சரிதான் நீ உத்திரவு பெத்துக்கோ நீ நடிக்கும்படியான பால பார்ட் ஏதாவது என் கதையில் இருந்தா உனக்கு சொல்லி யனுப்புகிறேன். இப்ப போய் வா.

**பா. கோ.** நமஸ்காரம் (போகிறார்)

**வே. ச.** ஏம்பா அவருக்கு பால பார்ட் குடுக்கறதா யிருந்தா இவர் ஆறடி யிருக்கிறாரே அவர் தகப்பனார் பத்து அடி இருக்கிறதா ஒருத்தரை பிடிக்கணும்.

**ச. மு.** (சிரித்துக் கொண்டே) சரிதாண்ட படுகாளி (மணியை அடிக்கிறார்)

(கோகில கோமளம் வருகிறாள்.)

**கோ.** நமஸ்காரங்க.

**ச. மு.** வாம்மா உட்கார். நீ யார் தெரியலையே.

**கோ.** நான்தான் கோகில கோமளம்—காயிதம் அனுப்பிச்சேனே.

**ச. மு.** ஓ—காயிதம் வந்துது அத்தோட படம் அனுப்பிக்கலே போலே யிருக்குதே.

**கோ.** இல்லேங்க,

**ச. மு.** பரவாயில்லே. நீ அநேகம் அயன் ஸ்திரி பார்ட் ஆக்ட் பண்ணியிருக்கிறதா சொல்லி யிருக்கறயே அதுகளி லெல்லாம் நீ ரொம்ப பேர் எடுத்தது எதிலே.

**கோ.** சந்திரமதி வேஷத்தலே

**வே. ச.** ஏம்பா சந்திரமதி வேஷத்துக்கு—

**ச. மு.** டேய் பேசாதிரு அப்போ சோகமான பாத்திரம்தான் உங்களுக்கு பிடிக்கும்போலே யிருக்கு.

**கோ.** ஆமாங்க சோக பாகத்திலேதான் ரொம்ப பேர் எடுத்தேன்.

**வே. ச.** அதென்ன ரஸம்பா சோகரஸம்.

**ச. மு.** சோகரஸம்னா அழறதுண்ணு அர்த்தம்—ஏதோ சோக ரஸமான பாட்டுலே ஏதாவது பாடம்மா கேக்கலாம்.

**கோ.** இப்போ பக்க வாத்தியம் ஒண்ணும் இல்லேங்களே—தொண்டையும் கொஞ்சம் கம்மலா யிருக்கிறது.

**வே. ச.** இந்த பொம்மனாட்டிங்களுக்கே காதுலே யிருக்கிற கம்மல் அடிக்கடி நினைச்சிக்கின கழுத்துலே வந்துடுத் தப்பா.

**ச. மு.** ஏதோ ஆகிரி ராகத்திலே ஆலாபனை பண்ணு.

**கோ.** அந்த ராகம் தெரியாதுக்கு.

**ச. மு.** அப்போ முகாரீ எடுத்துகினு பாடு.

**கோ.** (முகாரி ராகத்தில் ஆலாபனை செய்கிறாள்)

**வே. ச.** அம்மம்மா ஐயா உங்களை பாடச் சொல்ராங்க அழச் சொல்லலே.

**ச. மு.** டேய் சபாபதி பேசாதிரு. அந்த ராகம் அப்படித்தான் இருக்கும்,

**வே. ச.** மூக்கால அழறாப்போலேயா,

**ச. மு.** அதுக்குத்தான் முகாரிண்ணு பேர் வைச்சாங்க.

**வே. ச.** சரிதாம்பா அம்ம என்னை பாத்து யேம்மா பாடறே ஐயாவைப் பாத்து பாடம்மா.

**ச. மு.** டேய் பேசாமலிரு போதும்மா பாட்டு நண்ணாதான் இருக்குது நீ இப்போ உத்திரவு பெத்துக்கோ எங்கிட்ட யிருந்து காயிதம் வந்தாஉடனே வந்துபார் போய்வா.

**கோ.** நமஸ்காரங்க கட்டாயமா எழுதும்படியா வேண்டிக்கி றேன்.

**ச. மு.** சரிதான் போய்வா.

**கோ.** நமஸ்காரம் (போகிறாள்.)

**வே. ச.** ஏம்பா நீ கவனிச்சியா அந்த அம்மாளுக்கு ஒன்றைக் கண்ணப்பா—என்னு என்னையே பாத்து பாடராங்க ளேண்ணு கவனிச்சேன் முகம் ஒம்பக்கமிருக்குது, கண்ணு என்னை பாக்குது—அதுவுமில்லாத மூஞ்சி என் னப்பா ஒரே கருப்பா யிருக்கிறது.

**ச. மு.** அதான் கோகில கோமளம்னு பேர் வைச்சிருக்காங்க.

**வே. ச.** கோகிலம்னா என்னப்பா.

ச. மு. கோகிலம்ணறது ஒரு பட்சி அது காக்காயைப் போல வெள்ளையா யிருக்கும்! ஆனா பாட்டு மாத்திரம் நன்றா யிருக்கும்.

வே. ச. ஏம்பா இந்த அம்மாளையா, நம்ப படத்துலே சேர்த்துக்கறது மூஞ்சி அனுமாராட்டம் இருக்குதே.

ச. மு. இல்லே இவங்க பாட்டுகளை யெல்லாம் எடுத்துகினு பாடத் தெரியாத அழகான ஒரு ஆக்ட்ரெஸ்—பாடறதைப் போல் "டப்" பண்ணிடலாம். டேய் சபாபதி நான் பின்கட்டுக்கு கொஞ்சம் போய்வரேன் நான்வர்ர வரைக்கும் நீ என் நாக்காலியிலே உக்காந்துகினு யாராவது வந்த, நான் கேக்கறமாதிரி கேட்டு சமாச்சாரங்களை யெல்லாம் எழுதிவை.

வே. ச. இன்னுப்பா உன் நாக்காலியிலேயா, நான் உட்கார்ரது.

ச. மு. நன்னா உக்கார்ரா இந்த புது பிலிம் கம்பெனிக்கு உன்னெ மானேஜரா வைக்கப் போறேன்.

வே.ச.நான் மானேஜராயிருந்தா நீஎன்னுப்பா குமாஸ்தாவோ

ச. மு. அடேய் அதனபிரசங்கி நான் புரொட்யூஸர்.

வே. ச. அப்பப்பா நான் என்னென்ன கேட்டு எழுதணும் சொல்லிட்டு போப்பா.

ச. மு. என்னடா இத்தனேநாள் கேட்டது ஞாபகமில்லே— யாரானு தகுந்தவர்களா வந்தா அவுங்க ஊரு பேரு— அண்ணன் தம்பிகள் தகப்பன் தாயார் எத்தினி பேரு— எவ்வளவு சொத்து இருக்குது அவருக்கு, அதெல்லாம் கேட்டு எழுதிவை. மீதியெல்லாம் நான் வந்து பார்த்துகிறேன்.

வே. ச. ஆமாம்பா சொத்தைபத்தி ஏதுக்கப்பா கேக்கணும்.

ச. மு. அது ஒரு ரகசியம் அப்ரம் சொல்றேன் (உள்ளே போகிறார்)

வே. ச. ரைட்டு- நான்தான் மானேஜர்! (மணி யடிக்கிறான்)

(ராமசாமி நாய்க்கர் வருகிறார்)

**வே. ச.** யாரையா அது?

**ரா.** சபாபதி முதலியார் மானேஜரை பார்க்க வந்தேனுங்க.

**வே. ச.** இப்ப நான்தான் மானேஜர் உக்காருங்க, நான் கேக்கறத்துக்கெல்லாம் பதில் சொல்லுங்க உங்க பேர்?

**ரா.** ராமசாமி நாயக்கருங்க.

**வே. ச.** உங்க ஊர்?

**ரா.** தொறப்பாக்கம்.

**வே. ச.** உங்களுக்கு அண்ணன் தம்பிகள் எத்தினி பேர் ?

**ரா.** அதெல்லாம் யாருமில்லேங்க எனக்கு.

**வே. ச.** உங்கள் தகப்பனார் எத்தினி பேர் ?

**ரா.** என்னய்யா இப்படி கேக்கறைங்க

**வே. ச.** ஓ! ஆமாமாம் தாயார் எத்தினிபேர் அதையாவது சொல்லுங்க.

**ரா.** என்னய்யாது என் தாயார் ஒருத்தர்தான்.

**வே. ச.** ஆமாமாம் இல்லே சின்ன தாயாருங்க யாரானும் இருக்கராங்களோனு கேட்டேன்.

**ரா.** அதெல்லாம் யாருமில்லேங்க எனக்கு.

**வே. ச.** உங்களுக்கென்ன சொத்து இருக்குது.

**ரா.** அதெல்லாம் உங்களுக்கு என்னத்துக்கய்யா அதையேன் கேட்கிறீங்க.

**வே. ச.** அது ஒரு ரகசியம் அப்புறம் சொல்றேண்ணு சொன்னாரு எங்க எஜமான்.

**ரா.** உங்க எஜமானா! அப்போ நீங்க யாரு—அப்போ நான் அப்புறம் வந்து அவரோட பேசிக்கிறேனுங்க. (விரைந்து வெளியே போகிறான்.)

(சபாபதி முதலியார் உள்ளேயிருந்து வருகிறார்)

**ச. மு.** ஏண்டா! சபாபதி யாரோவந்து பேசிக்கினு யிருந்தாப் பலே யிருந்துதே எங்கே காணோம்.

**வே. ச.** சொத்தைப்பத்தி கேட்டேம்பா உடனே டுக்கி குடுத்தாரு.

**ச. மு.** சரி. உன் இடத்திலே போய் உக்காரு (மணியடிக்கிறார்)

(மாசிலாமணி முதலியார் வருகிறார்.)

ச. மு. ஓஹோ நீங்களா மாசிலாமணி முதலியார் வாங்க— ஏன் ஐயா புதிய கதை வேணுமுன்னு, பழங்கதைகளை யெல்லாம் சேர்த்து என்னமோ கதம்பமா அனுப்பிச்சி ருக்கிங்களே எங்கே புடிச்சீங்க இதுகளையெல்லாம்.

மா. இல்லீங்க இது ஒரு புதுமாதிரிங்க 2 வருஷமா பட்டினத் திலே ஒவ்வொரு படத்திலேயும் ஜனங்க சந்தோஷப் படுகிற காட்சிங்க என்னுண்ணு பாத்துக்கினு வந்தேன் அந்த காட்சிகளை யெல்லாம் கோத்து புது கதையை ஜோடிச்சுட்டேன் ஏங்க இது ரொம்ப பைன் (fine)னு இருக்காதுங்க.

ச. மு. அந்த காட்சிங்களை எழுதினவங்களெல்லாம் நம்ம பேரிலே மாஜிஸ்ட்ரேட் கோர்ட்லே சம்மன் பண்ணு இன்னும் ரொம்ப பைன் ஆகும். இந்தாங்க உங்க கதை எடுத்தும் போயி குப்பை தொட்டிலே போடுங்க.

வே. ச. வாணுங்க பழங் காகிதங்களே வாங்கிப் போராங்களே அவுங்ககிட்டே குடுத்தீங்கண்ணு துட்டு குடுப்பாங்க.

மா. இது போனு போவுதுங்க இண்ணைக்கி இன்னொரு புதுக் கதை கொண்டாந்திருக்கேங்க.

ச. மு. காட்டுங்க பாக்கலாம் (வாங்கிப் பார்த்து) என்னையா இது "வள்ளியும் சுப்ரமணியரும்"—என்னு விளையாட ரிங்களா என்னு—இதுவா புதுக்கதை இந்த வள்ளி கல் யாணம் எத்தினி தரம் போட்டிருக்காங்க பேசும் படத் திலெ.

மா. இது கல்யாணத்திலே முடியலீங்க, நான் எழுதினத் திலே சுப்ரமணியர் வள்ளியே கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னு பூடரார் கடைசீலே கோவிச்சிக்கினு.

ச. மு. சரிதான்!—அப்படியானு இந்த பேசும் படத்தைநாங்க பாக்கமாட்டோம்னு எல்லோரும் முதல்லேயே கோவிச் சிக்கினு பூடுவாங்க போயி வேறே எதுவானு யுக்தி பண்ணி வாங்க போங்க (மாசிலாமணி போகிறார்) மணி அடிக் கிறார்.

கிருஷ்ணசுவாமி முதலியார் விரைந்து வருகிறார்

ச.மு. வாப்பேன் கிஷ்ணசாமிசரியான சமயத்துக்கு வந்தேப்பா ரொம்ப சந்தோஷம் மின்னெயே வந்தியா என்ன?

கி. ஆமாத்தான் உங்க வேலைக்காரன் என்னை "கியூ"லே உக்காரவைச்சுட்டான். வரிசை கிரமமாதான் அனுப்பிப்பேன்னு நிர்ப்பந்திச்சான், அதிருக்கட்டும் இப்போ வெளியே போனாரே ஒரு ஆசாமி அது யாரத்தான்.

ச. மு. அவர் ஒரு நாடகாசிரியர்.

கி! அவர் என்னத்துக்கு வந்தாரு இங்கே!

ச. மு. சுருக்கமா சொல்றேன் கேளப்பா—கொஞ்ச நாளைக்கி மின்னே எனக்கு ஒரு பிர்லியண்ட் ஐடியா தோணிச்சி இப்ப எல்லாரும் பேசும் படம் புரொட்யூஸ் பண்ணராங்களே, நாமும் ஒண்ணு புரொட்யூஸ் பண்ணலாம்னு தோணிச்சு அதுக்காக நியூஸ் பேப்பர்லே ஒரு அட்வைஸ் பண்ணேன். உடனே வர்ரகாகிதங்களை படிக்கறத்துக்கும் வர்ர ஆக்ட்ர்ஸ்களை பாக்றதுக்குமே சரியா போவுது வேளை.

கி. இப்படி வர்ர யாருக்காவது அட்வான்ஸ் என்னமான குடுத்திருக்கீங்களா இதுவரைக்கும்.

ச. மு. நானாவது அட்வான்ஸ் குடுக்கறதாவது அவுங்கல்லவோ எனக்கு அட்வான்ஸ் கொடுக்கணும்.

கி. அவுங்க உங்களுக்கு அட்வான்ஸ் குடுக்கறதாவது!

ச. மு. அது ஒரு அபோரிஜனல் ஐடியா (ஒரிஜினல்)—இது ஒரு ரகசியம் உனக்கு இதை நான் சொல்லணும் நீ ரொம்ப சந்தோஷப்படுவேப்பா இதை ஆரம்பிக்றதுக்கு பின்னெ, நம்ப ஜெகந்நாத முதலியாரை கலந்து பேசினேன்.

கி. சரியான பேரோடு கலந்து பேசினீங்க அவர்தான் இதிலே லோட்டம் போட்டு இருக்கிற சொத்தை யெல்லாம் அழிச்சிட்டாரே.

ச. மு. அத்தொட்டுதான் அவருடைய அட்வர்டைஸ் கேட்டேன்.

கி. அவர் என்ன அட்வைஸ் கொடுத்தார்.

ச. மு. இதிலே எல்லாம் நீங்க தலையிட்டுக்காதீங்கன்னு சொன்னார்.

கி. பின்னே ஏன் இது ஆரம்பிச்சீங்க.

ச. மு. கொஞ்சம் கேளப்பேன் அவசரப்படாதே—அவர் கிட்டேயிருந்து பேசும் படம் புரொட்யூஸ் பண்ணற திலே என்னென்ன கஷ்டங்கள் இருக்குதுண்ணு கேட்டு தெரிஞ்சிகினேன் அப்புறம் நம்புளுக்கு ஒரு தம்பிடிகூட நஷ்டம் வராதபடி நடத்தணும்னு சொல்லி ரொம்ப யோசனை பண்ணி தீர்மானித்தேன்.

கி. அப்ப இதுவரைக்கும் இதுக்காக ஒண்ணும் செலவு பண்ணலே.

ச. மு.. நான் செலவு பண்றதாவது பணம் வர்ரதுக்கல்ல வழி பார்த்திருக்கிறேன்.

கி, அந்தமட்டும் ரொம்ப சந்தோஷம்—இனி சாவகாசமா அந்த வழியெல்லாம் சொல்லுங்க.

ச. மு. இந்த ஆக்டர்ஸ்களெல்லாம் அட்வான்ஸ் வாங்கிகினு அப்றம் டிம்கி கொடுக்கறாங்க அதனாலே பெரிய நஷ்டம் வருதுண்ணு அவர் சொன்னார். அதுக்கு ஒரு யுக்தி பண்ணேன் ஆக்டர்ங்களுக்கெல்லாம் பணம் அட்வான்ஸ் கொடுக்கறதில்லே — ஆக்டர்ஸ்களெல்லாம் எங்கிட்ட சரியா, நடக்கிறதுக்காக ரொக்க ஜாமீன் கட்டணும்னு தீர்மானம் பண்ணேம்.

கி. அத்தான் அந்த மாதிரி யாராவது முண்டங்க—ஆக்டர் சுங்க ஒப்புக் கொண்டார்களா.

ச. மு. ரெண்டு மூணு பேரு ஒப்புக்கொண்டு போயிருக்காங்க.

கி. எந்த ஊரத்தான் அவுங்க.

ச. மு. டேய் சபாபதி அவுங்க எந்த ஊர்டா.

வே. ச. மத்தூர்னு சொன்னாங்கப்பா.

கி, சரியான ஊரார்தான் மடையனுங்க!

ச. மு. இல்லேப்பன் இதுவரைக்கும் அவுங்க எந்த படத்திலே யும் ஆக்ட் பண்ணலியாம் அத்தொட்டு பப்ளிக் சிடி வால்யு (பப்ளி சிடி ) இருக்கும் உங்களுக் குண்ணு சொன்னவுடனே அவுங்க ஒப்பக்கொண்டாங்க.

கி. ரொம்ப சமாச்சாரம் தெரிஞ்சி வெச்சிருக்கீங்க அத் தான் அதிருக்கட்டும் எந்த கதையெ பேசும் படமா ஆக் கப் போறீங்க.

ச. மு. அதுதான் அப்பேன் கஷ்டமா யிருக்குது—எல்லாம் புதுமாதிரியா இருக்கணும்ணு சொல்லி அட்வர் டைஸ் பண்ணி யிருக்கேன்—கதையும் புது மாதிரியா இருக்கணும்—நீ தான் சொல்லப்பேன் யோசனை பண்ணி ஒரு நல்ல புதுக் கதையா.

கி. புது மாதிரிண்ணு எப்படி அத்தான்.

ச. மு. படத்திலே வரும்போது கதையிலே லாஸ்ட் சீன் முதல்லே வரணும் அங்கிருந்து பின்பக்கமே போயிக்கி னுருக்கனும் முதல் சீன் கடைசிலே வரணும்!

கி. அது ஒரு பெரிய புதுமாதிரிதான்!

ச. மு. இது என் அபோரி ஜனல் ஐடியா அப்பேன்—இதோ பாரு கடைசி சீனே முதல்லெ பார்த்தவுடனே இந்த கதை எப்படி ஆரம்பிக்குதுண்ணு எல்லாரும் ஆங்க்ஷஸ (Anxious) சா பின்னலே பாத்துகனே வருவாங்க கடை சீலேதான் தெரியும் எப்படி ஆரம்பிக்குதுண்ணு அவுங் களுக்கு.

கி. வெரி ஓரிஜினல் ஐடியா அத்தான் எக்ஸலெண்ட் (Excellent) இன்னும் என்னென்ன ஓரிஜினல் ஐடியாஸ் வைச்சிகினு இருக்கிறீங்க சொல்லிடுங்க எல்லாத்தையும்.

ச.மு. எல்லாம் பேசும் படத்துக்கும் பேர் குடுக்கராங்க. நம்ப படத்துக்கு இதுவரையில் யாரும் கொடுக்காத பேரா இருக்கணும் அல்லாமலும் எல்லாரும் இஷ்டப்படறதா இருக்கணும்.

**வே.ச.** அப்பா அப்போ நம்ப படத்துக்கு "பாதம் அல்வா" ண்ணு பேர் வைப்பா எல்லாருக்கும் இஷ்டமா யிருக்கும்.

**ச.மு.** அடெய் சத் அது சரியாயில்லே—அப்பேன் எனக்கு இன்னொரு அபோரிஜனல் ஐடியா திடீர்னு தோணுது—நம்ப படத்துக்கு பேரில்லா படம் என்று பெயர்வைக்கலாம் உனக்கென்ன தோணுது அப்பேன்.

**கி.** ரொம்ப ஒரிஜனல் ஐடியாதான்—இன்னும் உங்களுடைய மற்ற ஒரிஜனல் ஐடியாக்களை சொல்லிடுங்கத்தான்.

**ச.மு.** சொல்லட்டுமா அப்றம் ஆக்டர்ஸ் எல்லாம் பொம்மனாட்டி வேஷம் போடணும். ஆக்டிரஸெஸ் எல்லாம் ஆம்பிளே வேஷம் போடணும். இதை பாக்ரதுக்கு எவ்வளவு ஜனங்க வருவாங்கண்ணு நினைக்கிறே உனக்கென்ன தோணுது.

**கி.** எனக்கு இதைவிட ஒரு பெரிய ஒரிஜனல் ஐடியா ஏற்பாடு செய்தீங்கண்ணா இன்னும் அதிக ஜனங்க வருவாங்க பார்க்க.

**ச.மு.** சொல்லு சொல்லப்பேன். அப்படியே செய்யறேன்.

**கி.** "இந்த படத்தில் எல்லா நடிகர்களும், நடிகைகளும் தலைகீழாக நடப்பார்கள்"ண்ணு மாத்திரம் அட்வர்டைஸ் பண்ணுங்க கோடி கோடியா ஜனங்க பார்க்க வருவாங்க!

**வே.ச.** அப்பப்பா நான் தலைகீழா, நடப்பேம்பா என்னே கூட சேத்துகோப்பா இதுலே ஒரு ஆக்டரா!

**ச.மு.** என்னப்பேன் எழுத்தாளி பண்றயே என்னே.

**கி.** பின்னே என்ன அத்தான். இந்த மாதிரியெல்லாம் செய்தீங்கன்னா பேசும் படமாவது உருப்படறதாவது. இந்த யோசனைங்களை யெல்லாம் அடியோட உட்டுடுங்க அத்தான்.

ச.மு. இப்படியெல்லாம் செய்தா என் பேர் ரொம்ப பிரபல மாகும்னு நினைச்சேன்—

கி. உங்க பேர்தானே பிரபலமாகணும்?—நான் ஒரு நல்ல யுக்தி சொல்றேன் கேளுங்க. அந்தமாதிரிசெய்தீங்கண்ணு உங்க பேர் நம்ம தமிழ்நாடு மாத்திரமல்ல. இந்தியா முழுதலுமே பிரபலமாகும்.

ச.மு. சொல்லப்பேன் அப்படியே செய்யறேன்.

கி. நாளைக்கே ஒரு அட்வர்டைஸ்மெண்ட் போட்டுடுங்க "இரண்டு புள்ளிதி ஏற்பாடுசெய்ய இருந்த புதுமாதிரி பேசும் படமானது ஆரம்பிக்கபடுமுன் முடிந்துவிட் டது!"—இப்படி மாத்ரம்போடுங்க அதை பார்க்கரவங்க ளெல்லாம் யாரிது, யாரிதுண்ணு கேப்பாங்க. அப்றம் உங்கபேர் எல்லார் வாயிலேயும் அடிபடும்.

ச.மு. எல்லாம் யோசனை பண்ணி பார்த்தா நீ சொல்ரது ஒரு நல்ல யோசனைதாண்ணு தோணுது—அப்படியே செய்ய றேன்.

கி. அப்பா சபாபதி கொஞ்சம் சில்லுனு தண்ணிகொண்டா பாக்கலாம். என்ன வெய்யில், என்ன வெய்யில் இங்கே- எத்தினி நாளா இப்படி இருக்குது அத்தான்.

ச.மு. உன் அக்கா பெங்களூருக்கு போனதுமுதல் இப்படி தான் 108, 109 டிகிரியிலே இருக்குதப்பேன்.

கி. சரிதான். அதான் சில பேருக்கு மூளை உருகி போயிருக் குது.

ச.மு. இப்ப என்னை என்ன செய்யச் சொல்றேப்பா உங்க அக்க பெங்களூருக்கு போனதுமுதல் எனக்கு பொழுதே போவலேப்பா.

கி. ரொம்ப சரி. அக்காளும் எனக்கு அப்படிதான் எழு தீச்சு, நீங்க அங்கே இல்லாதே எனக்கு பொழுதேபோக

லேண்ணு ரெண்டு பேருக்கும் பொழுது போக்கும் மார்த கம் சுலபமானது—நீங்க நாளை காலமைக்கு பொறப் பட்டு என்னோட வாங்க உங்களை பெங்களூருக்கு கொண்டுபோய் அக்காளிடம் உட்டுடறேன்—உட்டுட்டு நான் ஷிமோகாவுக்கு போக வேண்டியிருக்கு ஒரு கொலேக்கேசு கண்டுபிடிக்க.

**ச.மு.** நல்ல யுக்தி அப்பேன்—இண்ணையே ராத்திரி ட்ரெய்ன் லேயே புறப்படலாமே ஞானம்பாளை பார்த்து ரொம்ப நாளாச்சு.

**வே.ச.** ஆமாம்பா. உடனே பொறப்படணும் நாங்கூட எம் பொஞ்சாதியை பார்த்து ரொம்ப. நாளாச்சப்பா.

முற்றிற்று.



# நான் குற்றவாளி

## ஓர் அங்க நாடகம்

### நாடக பாத்திரங்கள்

| | |
|---|---|
| கற்பக விநாயகம் பிள்ளை | —உபகார சம்பளம் வாங்கிக் கொண்ட கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர் |
| காந்திமதி நாதப் பிள்ளை | —அவரது குமாஸ்தா |
| கோமதி | —போலீஸ் கான்ஸ்டேபிள் |
| ராமநாதப் பிள்ளை | —போலீஸ் இன்ஸ்பெக்டர் |
| அபிராம சுந்தரி | —காந்திமதி நாதனின் பெண் குழந்தை |
| பாஸ்கரன் | —காந்திமதி நாதனின் ஆண் குழந்தை |
| கதை நிகழுமிடம் | —கற்பக விநாயகம் பிள்ளையின் வீடு |
| காலம் | —தற்காலம் |

# நான் குற்றவாளி

**இடம்:**—*திருநெல்வேலியில் கற்பக விநாயகம் வீட்டில் ஓர் அறை*
**காலம்:**—*மாலை*

*கற்பக விநாயகம் பிள்ளை தன் மேஜையின் எதிரில் உட்கார்ந்துக் கொண்டு பத்திரிகை ஒன்றை படித்துக்கொண்டிருக்கிறார். கான்ஸ்டபிள் கோமதி காந்திமதிநாத பிள்ளையை கைப்பிடியாக அழைத்துக்கொண்டு வருகிறான்.*

**க.** **(திடுக்கிட்டு)** என்ன அப்பா 586 ?—என்ன என் குமஸ்தாவைப் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறாய் ?

**கோ.** சொல்லுகிறேனுங்க—இந்த வெள்ளி கோப்பை உங்களுடையதுதானா பாருங்கள் ?

*(அதை மேஜையின் பேரில் வைக்கிறான்.)*

**க.** ஓ—**(அதை எடுத்துப் பார்த்து சற்று யோசித்து)** நான் நன்றாய்ப் பாராது சொல்வதற்கில்லை—நம்முடைய ஊரிலேயே அதைப்போன்ற ஆயிரக்கணக்கான கோப்பைகள் கிடைக்குமே; நான் எப்படி நிச்சயமாய் சொல்லுவது ?

*(காந்திமதிநாதப் பிள்ளை முகத்தை பார்க்கிறார்; அவர் தன் கண்ணீரை துடைத்துக்கொண்டிருக்கிறார்.)*

**கோ.** இதிலே உங்கபேரு இருக்குதுங்க; திரு. கபி என்று இருக்குதுங்க.

**க.** ஏன் ? கனகசபை பிள்ளையாய் இருக்கக்கூடாதா ? கண்ணுப் பிள்ளையாய் இருக்கக் கூடாதா ?— அது இருக்கட்டும் நடந்த சமாசாரம் என்ன ? சொல்.

**கோ.** சாயங்காலம் 5 மணிக்கு நான் என்டியூடி பிரகாரம் சின்னகடை தெருவை சுத்தி வரும்போது இவர் அங்கே மூலையில் இருந்த ஒரு மாருபாடி கடையில் இதை குதுவை வைத்து 5 ரூபாய் வாங்க பேரம் பண்ணிக்கொண்டிருந்தார். மாருபாடி 4 ரூபாய்தான் கொடுப்பேன் என்று சொல்லிவிட்டு—என்ன ஐயா இது ஏதோ பேர் போட்டு இருக்குதே என்று அதட்டி கேட்டான். இதைக் கேட்ட

வுடனே—நான் கிட்ட போயி இந்த கோப்பையில் இருக்கும் எழுத்துக்களைப் பார்த்து சந்தேகப்பட்டு இவரை விசாரிக்க இவர் சரியான பதில் சொல்லாததனுலே சந்தேகப்பட்டு கைப்பிடியாய் கோப்பையுடன் இவரை ஸ்டேஷனுக்கு அழைச்சிகினு போனேன். அங்கே சப் இன்ஸ்பெக்டர் இந்த கோப்பையைப் பார்த்து இது கற்பக விநாயகப் பிள்ளேயுடையது—கைதியை அழைத்துக்துக்கொண்டுபோய் இதை பற்றிய சமாசாரம் என்னவென்று விசாரித்துக்கொண்டு வா என்ருர்—அதன் பேரில் இவரை உங்ககிட்டே அழைசிகிட்டு வந்தேன்.

**க.** ஆமப்பா—என் குமாஸ்தா இப்படிப்பட்ட வேலே செய்பவன் அல்லவே சாதாரணமாக—இதில் ஏதோவிசேஷம் இருக்கவேண்டும் **(காந்திமதி முகத்தை பார்க்கிருர் அவன் தேம்பி அழுகிருன்)** 586 நீ பூன்துருத்தி ஸ்டேஷனில் தானே இருககிருய் சப் இன்ஸ்பெக்டர் ராமநாத பிள்ளேயிடம் நான் சொன்னதாக சொல்—இதை நானே விசாரித்து அறிகிறேன். என் குமாஸ்தா குற்றவாளி என்று எனக்கு தோன்றினுல், நாளேக்கு நான் ஸ்டேஷனுக்கு வந்து பிரியாது கொடுப்பதாகச் சொல் இந்த கோப்பையை அங்கு வைத்துவிட்டுபோ இன்னும் நான்—அதை பரிசோதித்துப் பார்க்கவேண்டும்; சப் இன்ஸ்பெக்டரிடம் இதைச் சொல்—வேண்டும் என்ருல் இது என்னிடம் இருப்பதாக ரசீது தருகிறேன்.

(ஒரு காகிதத்தில் ஏதோ எழுதிக் கொடுக்கிருர்.)

**கோ.** சரிதானுங்க—நீங்க வாங்க அய்யா.

**க.** 586 அவரும் இங்கே இருக்கட்டும். நான் இதன் உண்மையை தீர விசாரித்து அறியவேண்டும்.

**கோ.** என்னுங்க இவரை ரிமாண்டில் வைத்திருக்கும்படி சப் இன்ஸ்பெக்டர் உத்தரவு செய்திருக்கிருரே—ஜாமீன் இல்லாமல் இவரை எப்படி விட்டுவிடுவது ?

**க.** ஓ—நான் ஜாமீன் இருக்கிறேன் என்று சொல்; அந்த காகிதத்தை இப்படி கொடு அதில் நான் எழுதி தரு

கிறேன். (அப்படியே செய்கிருர். கான்ஸ்டேபிள் ஸெல்யூட் பண்ணிவிட்டு போகிருன்; கொஞ்ச நேரம் காந்திமதியின் முகத்தை உற்றுபார்த்துவிட்டு) ஏண்டாப்பா காந்திமதி அப்படி செய்யலாமா நீ?

கா. (தேம்பி அழுது அவர் காலை பற்றிக்கொண்டு) எஜமான்! எஜமான்—நான் செய்தது தப்பிதம்தான்—நான் பெரிய குடும்பஸ்தன்—என்னை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்—

க. காந்திமதி காலைவிடு—கண்ணை துடைத்துக்கொள், உண்மையை ஒன்றும் ஒளியாது என்னிடம் சொல். உன்னை காப்பாற்ற ஏதாவது மார்க்கம் இருந்தால் நான் காப்பாற்றுகிறேன் உண்மையை மாத்திரம் ஒன்றும் விடாது சொல்—நீ நல்ல யோக்கியனுய் இருந்தாயே இது வரையில் இந்த புத்தி உனக்கு எப்படி பிறந்தது?

கா. உண்மை இதுதானுங்க—என் பெண்ஜாதி கர்பவதியாயிருக்கிருள். பிரசவகாலம் நெருங்கியிருக்கிறது. இன்றுமத்தியானம் திடீர் என்று ஓர்வித வலி கண்டது. உடனே வயித்தியரை அழைத்துக்கொண்டுவந்து காட்டினேன். அவர் இது அபாயகரமானது. உடனே இதை தடுக்க வேண்டும் என்று சொல்லி ஒரு மருந்து எழுதி கொடுத்தார். மருந்து ஷாப்புக்கு கொண்டுபோனபோது அதன் விலை ரூ. 5 என்று சொன்னுர்கள். என்னிடம் சம்பளத்தில் மிகுதிருந்ததெல்லாம் 2 ரூபாய்தான், அதன் பேரில் உங்களிடம் வந்து முன் பணம் 5 ரூபாய் வாங்கிக் கொண்டு போகலாமென்று வந்தேன் என்று துரதிர்ஷ்டம் நீங்கள் வீட்டிலில்லை. பாளையங்கோட்டைக்கு நீங்கள் போயிருப்பதாகச் சொன்னுர்கள்—நான் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருக்கும்போது இந்த வெள்ளிகோப்பை அதோ இருக்கும் சோபாவின்கீழ் இருக்கக் கண்டேன். உடனே என் கர்ம வசத்தால் இதைக் கொண்டுபோய் எங்கேயாவது குதுவை வைத்து 5 ரூபாய் வாங்கி அதைக்கொண்டு மருந்து வாங்கலாமென்று எனக்கு புத்தி பிறந்தது. நீங்

கள் வந்தவுடன் உங்களிடம் சொல்லிவிடலாமென்று யோசித்தேன். உடனே முன்பின் யோசியாதவனாய் இதை எடுத்துக்கொண்டு மார்வாடிக் கடைக்குப் போனேன் இதுதான் சத்யம். அங்கு பின்பு நடந்ததை கான்ஸ்டேபில் உங்களுக்கு சொல்லியிருக்கிறான். நான் இதை திருட வேண்டுமென்று எண்ணமில்லை—வருகிற மாசம் சம்பளத்தில் எப்படியாவது ரூபாய் மிகுத்தி இதை மீட்டுக்கொண்டு வந்து உங்களிடத்தில் கொடுத்துவிடலாமென்று யோசித்தேன். இது என் பேரில் தவறுதான் எஜமான்! இனி நீங்கள் விட்ட வழி **(அழுதுக்கொண்டே)**—நான் பெரிய குடும்பஸ்தன். நான் ஜெயிலுக்கு போனால் என் குடும்பத்தின் கதி அதோகதிதான்.

**க.** அப்படிபட்ட பெரிய குடும்பம் யார் உனக்கு.

**கா.** என் தகப்பனார் தாயார் இருக்கிறார்கள். வயதானவர் கள், தகப்பனார் குருடு. தாயார் பாரிச வாயுவினால் பீடிக்கபட்டு படுக்கையோடு இருக்கிறார்கள். என் தமக்கை ஒருத்தி வேலை செய்துக்கொண்டிருந்தபோது யந்திரம்பட்டு கை முடமாய்விட்டாள்; அவன் புருஷன் இதுதான் சாக்கு என்று அவளை வீட்டைவிட்டு துரத்தி விட்டு வேறொரு கல்யாணம் செய்துக்கொண்டான். அவளையும் ஏதோ நான் குடிக்கும் கஞ்சியும் கொஞ்சம் வார்த்துக் காப்பாற்ற வேண்டியவனாயிருக்கிறேன்—நான், என் பெண்ஜாதி இரண்டு குழந்தைகள்.

**க.** சின்ன குடும்பம்தான்! இதை எல்லாம் ஏன் என்னி டம் முன்பே சொல்லவில்லை.

**கா.** எசமானிடத்தில் நான் வேலையில் அமர்ந்தபோது மாசத்துக்கு 60 ரூபாய் போதாது 75 ரூபாயாவது கொடுங்கள் என்று வேண்டினேன்.

**க.** வேலைக்கி வருபவர்களெல்லாம் பெரிய குடும்பம் சம்ப ளம் அதிகம் கொடுங்கள் என்றுதான் கேட்கிறார்கள். அவர்களில் நீயும் ஒருவன் என்று நினைத்தேன்! ஆமாம் பதினைந்தாம் தேதிதான் சம்பளம் வாங்கினாயே! இந்த

மூன்று தினங்களுக்குள்ளாக எல்லாம் செலவழிந்து போய் இந்த இரண்டு ரூபாய் மாத்திரம் எப்படி மீந்தது ?

கா. அதையும் சொல்றேன் கேளுங்க—(அழுகிறான்.)

க. த காந்திமதி நீ அழாமல் சொன்னால் கேட்கிறேன். இல்லாதுபோனால் கேட்கமாட்டேன்.

கா. (கண்ணைத் துடைத்துக்கொண்டு) எங்கள் எதிர் வீட்டில் இருக்கும் கடைக்காரச் செட்டியாருக்கு மளிகைச் சாமானுக்கு 30 ரூபாய் கொடுத்தேன், வீட்டு வாடகை 10 ரூபா போச்சு—சாவுக்காரிடமிருந்து வாங்கின கடனுக்காக வட்டி 10 ரூபாய்க் கொடுத்தேன்—

க. இரு அப்பா அதென்ன கடன் ? சாவுக்காரிடமிருந்து ஏன் கடன் வாங்கினாய் ?

கா. போன வருஷம் என் தாயார் பாரிச வாயுவினால் பீடிக்கப் பட்டபோது, வைத்திய செலவுக்காகவும், மருந்து செலவுக்காகவும் சில தடவைகளில் வாங்கின கடனையெல்லாம் சேர்ந்து 100 ரூபாய் ஆயிற்று.

க. அதற்கு அவன் 200 ரூபாய் பாண்டு எழுதி வாங்கினானோ.

கா. ஆமாங்க அதற்கு வட்டி மாசம் 10 ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது—

க. போதும் உன் கதையை நிறுத்து—நீ சொன்னதையெல்லாம் நம்புகிறேன்—என் சொல்படி மாத்திரம் நீ செய்ய வேண்டும் செய்தால் உன்னை காப்பாற்றுகிறேன். பயப்படாதே.

கா. எஜமான் ! அப்படியே செய்கிறேன். உங்கள் வார்த்தைக்கு குறுக்காக நான் எப்பொழுதாவது செய்தது உண்டா ? (அவர் காலை பற்ற போகிறான்) இந்த உபகாரத்தை ஏழு ஏழு தலைமுறைக்கும் மறக்கமாட்டேன்.

க. என் காலை விடப்பா—நாழியாகிறது—இதை நான் முன்பே செய்திருக்க வேண்டும்—(அருகில் இருக்கும்

தன் பெட்டியை திறந்து சில நோட்டுகள் எடுத்து) இந்தா இந்த 5 ரூபாயை எடுத்துக்கொண்டுபோய் முன்பு உன் பெண்சாதிக்கு வேண்டிய மருந்து வாங்கி உடனே கொடு.

கா. எசமான் ? இந்த உபகாரத்தை ஏழு ஏழு தலைமுறைக்கும்—

க. இருப்பா தலைமுறை கணக்கை அப்புறம் பார்க்கலாம்— இந்தா 210 ரூபாய். இதை நாளை காலை எடுத்துக் கொண்டுபோய் அந்த மாருபாடியிடம் அசலையும் வட்டியையும் பைசல் செய்துவிட்டு அண்டிமாண்டை ரத்து செய்துக்கொண்டு நாளைத் தினம் மாலை அதை எடுத்துக் கொண்டு என்னிடம் வா—

கா. (நோட்டுகளை வாங்கிக்கொண்டு) இந்த உபகாரத்தை எந்த ஜென்மத்திலும் மறவேன்—ஏழு ஏழு ஜென்மம் எடுத்தாலும்—

க. இதோ பார் ! இந்த ஜன்ம கணக்கு மறுபடியும் எடுத்தாயோ கொடுத்த ரூபாயெல்லாம் பிடுங்கிக் கொள்வேன் !—ஓடு மருந்து ஷாப்புக்கு

கா. அப்படியே எசமான் (போகப் புறப்படுகிறான்)

க. காந்திமதி நாளை காலை வரும்போது உன் பெண்ஜாதிக்கு வாசியாய் இருக்கிறது என்று நீ சொல்ல வேண்டும் போ. போ உடனே (காந்திமதிநாதன் போகிறான்)

காட்சி முடிகிறது

## (இரண்டாவது காட்சி)

இடம்:—அதே இடம்—காலம்—சுமார் ஒன்பது மணி காலை கற்பக விநயம் பிள்ளையும், ராமநாத பிள்ளையும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

க. அவன் எனக்கு சொன்னதை ஒன்றும் விடாமல் உங்களுக்கு சொல்லியிருக்கிறேன் — இப்பொழுது—சொல்லுங்கள்—அவன் சாதாரண குற்றவாளியைப் போன்றவனா—அவன் தண்டிக்கத் தகுந்தவனா ?

ரா. ஆமாம் சார் பீனல் சட்டப் பிரகாரம் அவன் செய்தது தவறுதானே ?

க. தவறுதான்—அதற்காக அவனை மூன்று ஜெயிலுக்கு அனுப்ப வேண்டுமோ. இன்ஸ்பெக்டர் அவாள் இதைக் கொஞ்சம் யோசித்து பாருங்கள் இந்த கேஸ் பழங் காலத்து நமது கிராமத்து பஞ்சாயத்தார் முன்னிலையில் வந்திருந்தால் அவனை தண்டித்திருப்பார்களா ? தற் காலத்தில் உங்கள் பீனல் கோர்ட் செக்ஷன் யானையும் பானையும் ஒன்ருய் மதிக்கிறது, எஜமான் சம்பளத்தை செக் மாத்திக் கொண்டுவர அனுப்பப்பட்ட ஒரு குமாஸ்தா அதை அப்படியே எடுத்துப்போய் குதிரை பந்தயத்தில் அவ்வளவையும் தோற்றுப்போய் எஜ மானிடம் வந்து தான் பணத்தை கொண்டு வருகிற வழியை நான்கு பேராக வந்து கையில் கத்தியை வைத் துக்கொண்டு பயமுறுத்தி அவ்வளவு பணத்தையும் பிடுங்கிக்கொண்டு போனதாக சொல்லும் திருடனுக்கும் மூன்று மாதத் தண்டனை, என் குமாஸ்தா தன் பெண் ஜாதியின் உயிரைக் காப்பாத்த—தன் எஜமானிடம் பிறகு சொல்லிவிடலாம் என்று எண்ணி இந்த கோப்பை யின் பேரில் ஐந்து ரூபாய் வாங்க முயன்றதற்கும் மூன்று மாதம் தண்டனை !—எப்படியிருக்கிறது நியாயம் ?— கலியுக தர்மம்.

ரா. தர்மம் சரிதான்—செக்ஷன் நீங்கள் சொன்னபடி வித்தி யாசப்படுத்தி பார்க்க இடம் கொடுக்கவில்லையே

க. அதுதான் தவறு. அதுதான் ஆங்கில தர்மத்திற்கு நமது பழங் கால தர்மத்திற்கும் உள்ள வித்தியாசம். பழங் காலத்தில் ஒருவன் குற்றம் செய்தால் ஏன் செய்தான் ? எந்த சந்தர்ப்பத்தில் செய்தான் ? முதலிய விஷயங்களை யெல்லாம் பற்றி ஆலோசித்தே தண்டனை விதிக்கப்பட் டிருந்தது. தற்காலத்தில் " எல்லி செட்டி லெக்க ஏக லெக்கா " என்கிறபடி எல்லாம் ஒன்றுதான். இதைப் பற்றி நான் போலீஸ் கமிஷனராய் இருந்தபோது பன் முறை எழுதி இருக்கிறேன். வெள்ளையர்கள் காதில் அது

விழவில்லை. கொஞ்சம் பொறுங்கள். கிராம பஞ்சாயத்து ராஜ்யம் சீக்கிரம் வரப்போகிறது அப்பொழுது எல்லாம் சரியாய்விடும்.

ரா. ஆனால் நீங்கள் உங்கள் குமாஸ்தாவின் மீது பிராது கொடுக்க போகிறதில்லை ?

க. இல்லை. நிச்சயமாய் இல்லை நீங்க என்ன வேண்டும் என்றாலும் செய்துக்கொள்ளுங்கள்.

ரா. ஒருவேளை குற்றச் சீட்டு போட்டு, மாஜிஸ்டிரேட்டு கோர்ட்டு இந்தக் கேஸை விசாரணைக்கு கொண்டுவந்து உங்களை சாட்சி போட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள் ?

க. உம்—அவன் அவசரமாய் 5 ரூபாய் கேட்டான். கையில் ரொக்கம் இல்லாதபடியால் இந்த கோப்பையை குதுவை வைத்து 5 ரூபாய் வாங்கிக்கொண்டு போ என்று சொல்வேன்? திருவள்ளுவர் கூறி இருக்கிறதை மறவாதீர் "பொய்மையும் வாய்மை இடத்து புரை தீர்ந்த நன்மை பயக்கும் எனின்"

ரா. நான் அப்படி கேஸ் போடமாட்டேன். உங்கள் பிராது இல்லாமல் வேடிக்கைக்கு நான் கேட்டு பார்த்தேன்—நீங்கள் இதையும் செய்வீர்கள். இன்னமும் செய்வீர்கள். நீங்கள் உத்தியோகத்தில் இருந்தபோது ஒருவனை கோர்ட்டார் அபராதம் போடும்படி செய்து அன்று சாயங்காலமே அந்த அபராதத்தை நீங்களே கொடுத்து அவனை விடுவித்தீர்கள் அல்லவா நீங்கள்! உங்கள் குமாஸ்தாவுக்கு இனிமேல் இந்தபடி செய்யாதிருக்கும்படி புத்தி கூறுவீர்கள் என்று நம்புகிறேன்.

க. அவனுக்கு புத்தி கூறுமுன் எனக்கே நான் புத்திக் கூறிக்கொள்ள வேண்டும்—பிள்ளையவாள் இந்த விஷயத்தில் யார் உண்மையில் குற்றவாளி தெரியுமா ?—நான்! யோசித்து பாருங்கள் காந்திமதி என்னிடம் குமாஸ்தாவாக அமர்ந்தபோது மாதத்திற்கு 75 ரூபாய் கேட்டான் நான் 60 ரூபாய்க்குமேல் கொடுக்க முடியாது

என்று சொன்னதன் பேரில் மன வருத்தத்துடன் ஒப்புக்கொண்டான். அதற்குக் காரணம் இப்பொழுது தெரிகிறது. அவன் குடும்பத்தை சம்ரட்சணை செய்வதற்கு குறைந்தபட்சம் 75 ரூபாய் பிடிக்குமென்பதற்கு சந்தேகமில்லை இப்பொழுது நான் விசாரித்து அறிந்ததை அப்பொழுதே விசாரித்தறிந்திருப்பேனாயின் கட்டாயமாய் அவனுக்கு 75 ரூபாய் சம்பளம் கொடுத்திருப்பேன்—நான் அப்பொழுது விசாரியாதது என் குற்றம். ஒரு வேலையாள் மாத குடும்ப சம்ரட்சணைக்கே போதாத வேலையில் அமர்ந்தால் அவன் என்ன செய்வான். தப்பு வழியில் தான் போகவேண்டும். ஆகவே அவனை தப்பு வழியில் போகவித்த எஜமான் தான் குற்றவாளி. இந்த குற்றத்திற்காக என்னை தண்டிக்கவேணுமேயொழிய காந்திமதியை தண்டிப்பது நியாயமல்லவென்று உறுதியாய் நம்புகிறேன்.

ரா. ஏன் உங்களுக்கே தண்டனை விதித்து கொள்ளுங்களேன் (சிரிக்கிறான்)

க. வாஸ்தவமாய் தண்டனை விதித்தே கொண்டேன்—அவன் என்னிடம் வேலையில் அமர்ந்தது முதல் இது வரையில் ஒவ்வொரு மாதத்திற்கும் 15 ரூபாய் கொடுத்திருந்தால் எவ்வளவாகும் என்று கணக்கிட்டு நேற்று, நான் முன்னே உங்களுக்கு சொன்னபடி அவனிடம் நான் கொடுத்த 215 ரூபாயையும் கழித்து இதோ மிகுதியை முடிப்பு கட்டி வைத்திருக்கிறேன். அவன் சீக்கிரம் வருவான். இந்த அபராதத்தை அவனிடம் சேர்க்கப் போகிறேன்—(காந்தமதிநாதன் அபிராம சுந்தரியையும் பாஸ்கரனையும் அழைத்துக்கொண்டு வருகிறான்)

க. சரியான வேளைக்கு வந்தாயப்பா உனக்கு நூறாயுசு

கா. (ராமநாதனை பார்த்து திடுக்கிட்டு நின்றுவிடுகிறான்)

ரா. பயப்படாதேயப்பா உன்னை பிடித்துக்கொண்டு போக மாட்டேன் நான். உன் யஜமான் உன் மீது பிராது கொடுக்கமாட்டேன் என்று மறுத்துவிட்டார்

கா. தெய்வமே கதி!—எசமான் இந்த உபகாரத்தை ஈரேழு ஜன்மத்திலும்—

க. அடடா இந்த ஈரேழு ஜன்மக் கதை நேற்றுடன் முடிந்துவிட்டது என்று எண்ணினேனே அதிருக்கட்டும் உன் பெண்ஜாதிக்கு என்னமாய் இருக்கிறது

கா. வைத்தியர் சொன்ன மருந்தை வாங்கிக்கொண்டு போய் கொடுத்தவுடன் 10 நிமிஷத்திற்குள் வலியெல்லாம் நின்றுவிட்டது; இன்று காலையில் வைத்தியர் வந்து பார்த்து இனி பயப்பட வேண்டியதில்லை இனி சுகப்பிரசவம் ஆகும் என்று சொல்லிவிட்டு போனார்—எல்லாம் எசமான் தயவு

க. எசமான் தயவுமில்லை ஒன்றுமில்லை அதிருகட்டும் மாறுபாடியை பார்த்தாயா—

கா. இதோ—(ராமநாதப் பிள்ளையை பார்த்துக்கொண்டே அவன் ரத்து பண்ணி கொடுத்த அண்டிமாண்டையும் 5 ரூபாயையும் மேஜையின் பேரில் வைக்கிறான்)

க. இதேதப்பா 5 ரூபாய்

கா. மாறுபாடி உனக்கு ரூபாய் ஏது என்று கேட்டான் என்னை நான் நடந்ததையெல்லாம் சொன்னேன். அதன் பேரில் அவன் 'உங்க எஜமான் தர்மம் பண்ணு நானும் கொஞ்சம் தர்மம் பண்றேன் என்று சொல்லி வட்டிக்காக 5 ரூபாய் எடுத்துக்கொண்டு இந்த 5 ரூபாயை என்னிடம் கொடுத்துவிட்டான்.

க. வெளியிலே மழை பெய்கிறதா பாருங்க ராமநாத பிள்ளை

கா. நான் வரும்பொழுது கொஞ்சம் தூற ஆறம்பிச்சுதுங்க

க. சரிதான் அதுதான் இந்த கத்தரி மாதத்தில் மழை பெய்கிறது!—மாறுபாடி வட்டி பணத்தில் வஜா செய்வதென்றால்!—ஆமா இந்த 5 ரூபாய் என்னிடம் ஏன் கொடுக்கிறாய்?

கா. இது உங்களுக்கு சேரவேண்டிய பணம் யஜமான்

க. ராமநாத பிள்ளை உங்களுடைய திருடன் குணம், எப்படியிருக்கிறது இப்பொழுது 5 ரூபாயையும் எனக்கு கொடுக்காமல் தானே எடுத்துக்கொண்டால் எனக்கு என்ன தெரியப் போகின்றது

ரா. நான் எண்ணியது தவறுதானுங்கள் என்னை பாவத்திற்கு ஆளாக்காமல் காப்பாற்றினீர்கள்—நான் விடை பெற்றுக் கொள்கிறேனுங்கள் (எழுந்திருந்து) அப்பா காந்திமதி நீ அதிர்ஷ்டசாலி இப்படிபட்ட யஜமானர் எந்த ஜன்மத்திலும் உனக்கு கிடைப்பது அரிது

கா. வாஸ்தவம்தானுங்கள் நான் ஈரேழு ஜன்மம் எடுத்தாலும்—

க. (அவனைத் தடுத்து) உம்

கா. இல்லேங்கள், இல்லேங்கள் நான் சொல்லவில்லை

(ராமநாதப் பிள்ளை போகிறார்)

க. காந்திமதி முதல் சமாச்சாரம் நீ என்னிடத்தில் வேலைக்கு அமர்ந்தது முதல் நான் உனக்கு நீ கேட்டபடி மாதம் 75 ரூபாய் கொடாததற்காக என் மீது குற்றம்சாற்றி அதற்கு நானே அபராதம் போட்டுக் கொண்டேன்—அது முதல் மாதம் ஒன்றுக்கு 15 ரூ. விழுக்காடு கணக்கு போட்டு அதினின்றும் உனக்கு நான் கொடுத்த 215 ரூபாய் கழித்து மிகுதியை முடிப்பு கட்டி வைத்திருக்கிறேன். இதோ இதை எடுத்துக் கொள்

கா. என்னுங்க இது ! (தயங்குகிறான்)

க. நான் சொல்வதைக் கேள் கட்டாயமாய் உனக்கு சேர வேண்டிய பணம்—தானாய் வருகிற ஸ்ரீதேவியை தடுத்துத் தள்ளாதே

கா. (பணத்தை எடுத்துக்கொண்டு) எசமான் எந்தெந்த ஜன்மத்திலும்—

க. (அவனை தடுத்து) மறுபடியும் ஜன்மக் கணக்குக்கு போகாதே—அதிருக்கட்டும் குழந்தைகள் யார் உன் குழந்தைகளா

கா. ஆமாங்கள்

க. அவர்களேயேன் இங்கு அழைத்துக்கொண்டு வந்தாய் என்று நான் கேட்கலாமோ ?

கா. எசமான் கோபித்து கொள்ளப்படாது.

க. இதற்கு என்ன கோபம் பயப்படாமல் சொல்.

கா. இல்லேங்கள்—இங்கே நேற்று நடந்த சமாசாரத்தை யெல்லாம் இன்று காலே என் பெண்ஜாதியிடம் சொன்னேன், அதற்கு அவள் இன்றைக்கு நீங்கள் அவரிடம் போகும்போது இந்த இரண்டு குழந்தைகளேயும் அழைத்துக்கொண்டு போய் உங்கள் பாதத்தில் பணியச் செய்து உங்களுடைய ஆசீர்வாதத்தை பெற்று வரும்படி சொன்னுன் (குழந்தைகளுக்கு சைகை செய்ய அவர்களிருவரும் சாஷ்டாங்கமாக கற்பக விநாயகம் பிள்ளையை நமஸ்கரிக்கின்றனர், பிள்ளே அவர்களுக்கு ஆசீர்வாதம் செய் செய்கிருர்.)

க. பாப்பா உன் பெயரென்ன ?

அ. அபி!

க. அதென்ன மாது அபி என்று பெயர்.

கா. இவள் பெயர் அபிராம சுந்தரி ! வீட்டில் எல்லோரும் அபி என்றே கூப்பிடுகிற வழக்கம்.

க. அபி அம்மா படிக்கிருயா அம்மா.

அ. ஏழாவது வகுப்பில் படிக்கிறேன்,

க. உன் பெயரென்னப்பா ?

பா. (உரக்க) பாஸ்கர்.

க. பாஸ்கர் அதென்ன பெயரப்பா ?

கா. இல்லேங்க அவன் சரியான பெயர் பாஸ்கரன். சாதாரணமாக கூப்பிடுகிறது பாஸ்கர். பாஸ்கர சேதுபதியிடத்தில் நான் வேலேயாயிருந்தபொழுது இவன் பிறந்தான் ஆகவே அந்த யஜமான் பெயரை வைத்தேன்.

க. ஓ—சரிதான் அப்பா பாஸ்கர் நீ படிக்கிருயா ?

பா. படிக்கிறேனே—கணக்குகூட போடறேனே.

க. ஏதோ ஈரேழு எத்தனை?

பா. ஈரேழு பதிநாலு, ஈரெட்டு பதினாரு, ஈரோன்பது பதினெட்டு—

க. அப்பாடா போதும் போதும் நிறுத்து (எழுந்திருந்து அலமாரியை திறந்து பெப்பர்மின்ட் புட்டியை எடுத்து அதிலிருந்து ஒன்றை அபிராமிக்கும் இன்னொன்றை பாஸ்கரனுக்கும் கொடுக்கிறார். பாஸ்கரன் உடனே வாயில் போட்டுகொள்கிறான், அபிராமி ஜோபியில் போட்டுக்கொள்கிறாள்)

க. ஏம்மா நீ சாப்பிடாமல் ஜோபியில் போட்டுக்கொண்டாய்?

அ. (தயங்கி) எங்க அம்மாளுக்கு பாதம் கொட்டை பப்பர்மிண்ட் ரொம்ப இஷ்டம். அத்தொட்டு அவுங்களுக்கு கொடுக்க கொண்டுபோறேன்.

க. அபி, நான் சொல்றபடி கேள் இதோ இந்த புட்டியில் இன்னும் ஏழெட்டு பப்பர்மின்டுகள்தானிருக்கின்றன. அப்படியே புட்டியோடு கொண்டுபோய் அம்மாளிடம் கொடுத்து விடு—உனக்கு கொடுத்தை நீ சாப்பிட்டு விடு—காந்திமதி உன் குழந்தைகள் நல்ல குழந்தைகளப்பா. இருவரையும் நன்றாக படிக்கவை செலவுக்கு பயப்படாதே அவர்கள் படிப்பு செலவை நான் முற்றிலும் ஏற்றுக்கொள்கிறேன். முன்பு நான் கொடுத்த பணத்தை உன் பெண்ஜாதியின் பிரசவ செலவுக்கு வைத்துக்கொள்—இப்பொழுதே ஒன்று சொல்கிறேன். உனக்கு பணம் அவசியமாக வேணடியிருந்தால் என்னைக் கேள் நான் தருகிறேன்—மாறுபடியிடம் போய் கடன் வாங்கினாயா உன்னை வேலையினின்றும் நீக்கிவிடுவேன்.

கா. அப்படியே யசமான் நீங்கள் கோபித்துக்கொண்டாலும் கோபித்துக்கொள்ளுங்கள் என் மனதில் இருப்பதை நான் சொல்லித்தான் தீரவேண்டும்.

க. என்ன சொல்லப்பா ?

கா. எசமான் நான் எத்தனை ஜன்மம் எடுத்தாலும் நீங்கள் தான் எனக்கு யசமானய் இருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

க. அடடா ! பழைய கதை வந்ததே மறுபடியும்—இன்னும் கொஞ்ச நாழி இருந்தால் நீ இந்த கதையை சொல்லிக்கொண்டிருப்பாய் நாழியாச்சுது குழந்தைகளை இட்டுக்கொண்டு போய் வீடு சேர். போகும்போது—காந்திமதி உன்னிடத்தில் சில்லறை ஏதாவது இருக்கிறதா உன் பணம் ?

கா. (தன் ஜேபியில் பார்த்து) $3\frac{1}{2}$ அணு இருக்குதுங்க,

க. சரியாயிருக்கிறது 3 அணுவுக்கு ஒரு தேங்காய் வாங்கிக் கொள் $\frac{1}{2}$ அணுவிற்கு கற்பூரம் வாங்கிக்கொள். இந்த தெரு முனையில் ஒரு பிள்ளையார் கோவில் இருக்குது பார். பிள்ளையாருக்கு கற்பூரத்தை ஏத்தி தோங்காயை உடைத்து கும்பிட்டுவிட்டு தேங்காயை வீட்டுக்கு கொண்டு போ.

கா. இல்லேங்க தேங்காயை சூரை விட்டுவிடுகிறேன்.

க. வேண்டாமப்பா-சூரைவிட்டால் தெருவில் திரிகிறசோம்பேரி பசங்கள் தான் எடுத்துக்கொள்வார்கள்—உடைத்த தேங்காயை கொண்டுபோய் சமையலுக்கு உபயோகித்துக்கொள்.

பா. அப்பப்பா ! தேங்கா துவையல் பண்ணி சாப்பிடலாம்பா:

க. அவன் தான் புத்திசாலி. பாஸ்கர் உங்கப்பாவை இழுத்து கொண்டு போ இல்லாவிட்டால் ஏதாவது இன்னும் பேசிக்கொண்டு இருப்பர்.

கா. இல்லேங்க இதோ புறப்பட்டு விட்டேன்

க. காந்திமதி சீக்கிரம் உனக்கு பிறக்கப் போகிற குழந்தை பெண் குழந்தையாயிருந்தால் கற்பகம் என்று பெயர் வை, ஆண் குழந்தையாயிருந்தால் கற்ப கவிநாயகம் என்று பெயர் வை.

கா. அப்படியே வைக்கிறேனுங்கள் உங்கள் பெயரை.

க. அடடா! என் பெயரை வைக்க சொல்லவில்லையப்பா அந்த பிள்ளையார் பெயர் வை. அந்த பிள்ளையாருக்கு கற்பக விநாயகம் பிள்ளையார் என்று பெயர்.

மா. அப்படியே செய்யுறேனுங்கள் எசமான் (கும்பிடுகிறன் குழந்தைகளும் கும்பிடுகிறார்கள்)

க. எல்லாரும் பிள்ளையாரை கும்பிட்டுவிட்டு போங்கள் உலகமெல்லாம் க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று. (மூவரும் புறப்படுகிறார்கள்)

காட்சி முடிகிறது.

நாடகம் முற்றியது.

